# சட்டத்தின் ஒளியில் கட்டாயக் குளியல்!

## முழுக்கு குறித்த முழுத் தகவல்கள்

(வயது வந்தவர்களுக்கு மட்டும்)




ஆலிம் கவிஞர்

தேங்கை ஷறபுத்தீன் மிஸ்பாஹி





சுலைமானியா பப்ளிஷர்ஸ்

# சட்டத்தின் ஒளியில்

# கட்டாயக் குளியல்!

- முழுக்கு குறித்த முழுத் தகவல்கள் -

**(வயது வந்தவர்களுக்கு மட்டும்)**

**ஆலிம் கவிஞர்**
**தேங்கை ஷறபுத்தீன் மிஸ்பாஹி**
அரபிப் பேராசிரியர், ஆர்.டி.பி. கல்லூரி, பாபநாசம்

வெளியீடு
**சுலைமானியா பப்ளிஷர்ஸ்**
மஃமூர் சென்டர், முதல் மாடி,
81, அங்கப்பன் தெரு,
தபால் பெட்டி: 1886, சென்னை - 600 001
போன்: 252 70 550

# சட்டத்தின் ஒளியில்
# கட்டாயக் குளியல்


ஆசிரியர் : **தேங்கை ஷறபுத்தீன் மிஸ்பாஹி**
(Dept. of Arabic, RDB College,
Papanasam)

பதிப்புரிமை : வெளியீட்டாளருக்கே!

வெளியீட்டு நாள் : ஜனவரி 2003

பக்கங்கள் : 64

அளவு : 1/8 கிரவுன்

ஒளி அச்சு & அட்டைப்படம் : **மாஹி கிராஃபிக்ஸ்**, சென்னை-1

அச்சிட்டோர் : **மாஹின் பிரிண்டர்ஸ்**
29, அப்பு மேஸ்திரி தெரு,
சென்னை-1. போன்: 2522 5143

வெளியீடு : **சுலைமானியா பப்ளிஷர்ஸ்**
81, அங்கப்பன் தெரு,
சென்னை-1.
போன்: 252 70 550

விலை : **ரூ. 15.00**

**மணமகன்:**

**மணமகள்:**

**மணநாள்:**

# மன்றல் வாழ்த்து!

வாழ்க, வாழ்க, வாழ்க என்று வாழ்த்துவோம்!
வாழ்வில் இன்பம் பெற்றுவாழ வாஞ்சைமண மக்களை
வாழ்க, வாழ்க, வாழ்க என்று வாழ்த்துவோம்!

திருமணத்தால் இருமனங்கள் தேன்சுவையாய் இணையவே
அருமைமண மக்கள்நீவிர் ஆனந்தமாய் வாழ்கவே!

இல்லறத்தின் பூம்பொழிலில் இனியஉலா கண்டிடும்
நல்லறத்து தம்பதியீர் நலங்கொழிக்க வாழ்கவே!

மங்கையவள் மலர்க்கரத்தை மங்களமாய்ப் பற்றியே
பொங்குமின்பம் எங்கும் தங்க பொலிவுடனே வாழ்கவே!

கண்ணியத்தின் களஞ்சியமாம் கருணைநபி நாதரின்
புண்ணியநல் வழிதொடர்ந்து புன்னகையாய் வாழ்கவே!

வானம்பூமி யாவும் படைத்த வல்ல அல்லாஹ் கருணையால்
கானம் பாடும் சிட்டுகள்போல் களிப்புடனே வாழ்கவே!

பாவடிவம்: "தேங்கையார்"

அன்புடன் வாழ்த்தும்

தமிழ் மாநில ஜமா அத்துல் உலமாப் பேரவையின் தகைசான்ற தலைவரும், லால்பேட்டை மன்பஉல் அன்வார் அரபிக் கல்லூரியின் – நபிமொழித்துறைத் தலைவருமாகிய **'கன்சுல் உலூம்' மவ்லானா, மவ்லவி, அல்ஹாஜ் A.E. முஹம்மது அப்துர் ரஹ்மான் ஹஜ்ரத் கிப்லா** அவர்கள் மனமுவந்தளித்த

## மதிப்புரை

எல்லாம் வல்ல அல்லாஹ்வின் கலாமாகிய குர்ஆன் ஷரீபும், அவனுடைய றசூலும் ஹபீபுமாகிய எம்பெருமானார் (ஸல்) அவர்களின் போதனைகளாகிய ஹதீஸ் ஷரீபும், மனிதனுக்குத் தேவையான எல்லாவித சட்டங்களையும் வாழ்க்கை வழி முறைகளையும் தெளிவுபடுத்தியுள்ளன. இந்த குர்ஆன் – ஹதீஸ் சட்டங்களை ஆய்வு செய்த மாமேதைகளான இமாம்கள் – குர்ஆன் ஹதீஸை அடிப்படையாக வைத்துத் தொகுத்துத் தந்த சட்டக் களஞ்சியம்தான் 'ஃபிக்ஹ்' ஆகும்.

ஃபிக்ஹ் சட்டம் வழியாக இஸ்லாம், மனித வாழ்வின் ஒவ்வொரு பிரச்சனைக்கும் வழிகாட்டுகிறது. உண்ணுவதற்கும், பருகுவதற்கும் மட்டுமல்ல, உணவையும் பானத்தையும், கழிவாக வெளியேற்றும்போது – கழிவறையில் எவ்வாறு நுழைய வேண்டும்? எவ்வாறு அமர வேண்டும்? எவ்வாறு சுத்தம் செய்ய வேண்டும்? எவ்வாறு சுத்தமாக வெளியேற வேண்டும்? என்பவை குறித்தெல்லாம் விளக்குகிறது. இந்த வகையில், மனித உடலிலிருந்து வெளியேறும் 'மன்மத நீர்' (மதீ) விந்து, மாதவிலக்கு இரத்தம், பிரசவ இரத்தம் போன்றவற்றிலிருந்து மனிதன் எவ்வாறு சுத்தமாக வேண்டுமென்பதையும் இஸ்லாம் விளக்குகிறது.

ஈமான் என்ற இறைநம்பிக்கையின் சரிபாதியாக சுத்தத்தை இஸ்லாம் சுட்டிக் காட்டுவதால் – முஸ்லிமான ஒவ்வொரு ஆணும் பெண்ணும் தன் பருவ வயதை அடைந்தவுடனேயே, இத்தகைய எல்லாவித சுத்தங்களின் வழிமுறைகளையும் அறிந்து கொள்வது அவசியமாகும். ஏனென்றால், இவற்றையெல்லாம் அறியாத சூழ்நிலையில் – தொழுகை, நோன்பு, ஹஜ் போன்ற கடமைகளை நிறைவேற்றுவதில் கூட முறைகேடுகள் ஏற்பட்டுவிடுகின்றன.

எனவே, 'ஒவ்வொரு இஸ்லாமிய இளைஞனும் இளம்பெண்ணும் குளிப்பு சம்பந்தமான முழு விபரங்களையும் தெரிந்து கொள்ள வேண்டும்' என்ற ஆவலில் – அன்புத் தம்பி, ஆலிம் கவிஞர் **தேங்கை ஷறபுத்தீன் மிஸ்பாஹி** அவர்கள் எடுத்த இந்த நூலின் முயற்சி, மிகவும் பாராட்டுக்குரியது. குர்ஆன் வசனங்கள், பல்வேறு ஆதாரப்பூர்வமான ஹதீஸ்கள் ஆகியவற்றுடன், ஹனபி – ஷாபி ஆகிய இரு மத்ஹபுகளின் சட்டங்களையும், தனித்தனியே – அழகு தமிழில் அருமையாக விளக்கியுள்ளார்.

வயதுக்கு வந்த ஆண்களும் பெண்களும் வாழும் வீடுகள் தோறும் இருக்க வேண்டிய நூல், இந்த நூல் என்பதில் எவ்வித ஐயப்பாடுமில்லை. எனவே, முஸ்லிம் இளைஞர்களும், இளம்பெண்களும் இதைப் படித்துப் பயனடையலாம். எல்லாம் வல்ல அல்லாஹ், இந்த நூலாசிரியருக்கு இதுபோல் மேலும் பல நல்ல நூல்களை எழுதி வெளியிடும் நஸீபைத் தந்தருள்வானாக! ஆமீன்!

1–1–03
லால்பேட்டை

عبد الرحمن ...
அ. இ. ஜெய்னுத் அப்துர்ரஹ்மான்

தஞ்சை - பாபநாசம் - ஆர்.டி.பி. கலை அறிவியல் கல்லூரியின் முதல்வர், திருச்சி ஜமால் முஹம்மது கல்லூரி தமிழாய்வுத் துறையின் முன்னாள் தலைவர் **'இலக்கியத் தேனருவி' அல்ஹாஜ், பேராசிரியர், டாக்டர் தா. பிச்சை முஹம்மது M.A. Ph.D.,** அவர்கள், அகமுவந்தளித்த

## அணிந்துரை

அருளாளன் அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்!

எங்கள் **ஆர்.டி.பி. கல்லூரியின்** அரபிமொழித் துறையில் ஆசிரியப் பணியாற்றும், 'ஆலிம் கவிஞர்' **தேங்கை ஷறபுத்தீன் மிஸ்பாஹி** அவர்கள், ஒரு நல்ல மார்க்க அறிஞர்; தேர்ந்த கவிஞர்; சிறந்த எழுத்தாளர் என்பதை நான் அவருடன் பழகிய கடந்த ஒன்றரை ஆண்டுகளில் கண்டு கொண்டேன். அவரைப் பற்றிக் கூறுவதற்குப் பல செய்திகள் உள்ளன. தேவை கருதி, ஒரு தகவலை மட்டும் தருகிறேன்.

ஆர்.டி.பி. கல்லூரி மாணவ, மாணவியருக்கு **அவர், 'தீனியாத்' கல்வி**யையும் புகட்டும் நிலையில் நானும் அவரும் பல விஷயங்கள் பற்றி கலந்து பேச வேண்டிய கால கட்டத்தில் ஒரு முறை, 'வயது வந்த மாணவியருக்கு வகுப்பறைகளில் - அவர்களுக்கு மட்டுமே தேவையான சில செய்திகளை - எவ்வாறு கற்பிப்பது? என்னதான் தந்தையின் நிலையில் நின்று கற்பித்தாலும், இங்கிதக் குறைவு ஏற்படுமே!' என்று நாங்களிருவரும் விவாதித்து, சங்கடமான சூழ்நிலையில் ஒரு முடிவுக்கு வராமல் நிறுத்திக் கொண்டோம். 'முஸ்லிம் பெண் ஆசிரியர்கள் மூலமாகக் கற்பிப்போமா?' என்ற சிந்தனையும் ஆராயப்பட்டது.

ஒரு நாள் மவ்லவி ஷறபுத்தீன் என்னிடம். 'இரு பாலருக்கும் அவசியமான குளிப்புக் கடமை முதலானவை பற்றிய ஒரு, விளக்க நூல் எழுதவுள்ளேன். அதனைப் படிக்கும் மாணவ மாணவியர் துப்புரவு நிலை பற்றி முற்றாக அறிந்து கொள்ள முடியும்' என்று கூறினார். "எண்ணிய எண்ணியாங்கு" இயற்றிய அவரது கருத்துக்கள், நூல் வடிவம் தாங்கி வெளிவந்துவிட்டன.

முஸ்லிம் உயர் கல்விக் கூடங்களில் பயிற்றுவிக்கப்படும் தீனியாத் பயிற்சிகளை நிறைவுபடுத்தும் வண்ணம், அந்தப் பாடத் திட்டத்தை அநுசரித்து இந்நூல் எழுதப்பட்டுள்ளது.

நூல் பற்றிய மதிப்பு, நூலாசிரியர் பற்றிய பல்வேறு தகுதிப்பாடுகள் பற்றியெல்லாம் எழுவது மிகை. 'அனைவரும் படித்தறிய வேண்டிய நல்ல – தேவையான – நூல் இது' என்பதனை உறுதிபடக் கூறுகிறேன்.

நூலாசிரியர், மேலும் பல அரிய நூல்களை மக்களின் உயர்வு கருதி வழங்குவாராக!

1–1–03
பாபநாசம்

# நுழைவாயிலில் . . .

அருளன்பு பண்பில் அளவற்ற அல்லாஹ்
திருப்பெயர் போற்றித் திறப்பு!

வல்லவன் அல்லாஹ்வின் நல்லருளால் கடந்த 22 ஆண்டுகளாக அரபிக் கல்லூரிகளில் ஆசிரியப் பணியாற்றும் வாய்ப்பினைப் பெற்ற யான், கல்விப் பணியினைக் கண்ணெனக் கருதும் கனிவாளர் **இராஜகிரி அல்ஹாஜ் M.A. தாவூத் பாட்சா** அவர்களால் ஆர்.டி.பி. கலை அறிவியல் கல்லூரியின் அரபித்துறையில் ஆசிரியராகப் பணியாற்றும் வாய்ப்பினைப் பெற்றேன். இக்கல்லூரி மாணவ – மாணவியர்க்கு அரபி மொழிப் பாடத்துடன், இக்கல்லூரியில் '**அய்யம்பேட்டை அப்துர்ரஹீம் B.A. ஹாஜியார்**' பெயரில் அமைந்திருக்கும் திருக்குர்ஆன் வகுப்பில் 'தீனியாத்' வகுப்பும் யான் நடத்த நேரிட்டது. இவ்வாறு நடத்துங்கால் – 'தமிழக அனைத்து முஸ்லிம் கலை அறிவியல் கல்லூரி'களின் பாடத்திட்டம் (Syllabus) எமது கல்லூரி முதல்வர் அவர்களால் எம்மிடம் ஒப்படைக்கப்பட்டது. அந்தப் பாடத்திட்டத்தில் முழுக்கு குறித்த பாடமும் இடம் பெற்றிருந்தது.

**இருபாலர் கல்வி** (Co-Education) வகுப்பில், இந்தப் பாடம் பயிற்றுவிப்பதில் ஏற்பட்ட தர்ம சங்கடத்தைத் தவிர்க்கும் நோக்கில் எழுதப்பட்ட – நன்னூலே, இந்நூலாகும். தமிழகம் முழுவதிலுமுள்ள முஸ்லிம் கல்லூரிகளில் பயிற்றுவிக்கும் தீனியாத் வகுப்பு ஆசிரியர்களுக்கும் எமக்கேற்பட்ட தர்மசங்கடம் ஏற்படாமல் தவிர்த்திட இந்நூல் உதவிடும், இன்ஷா அல்லாஹ்!

எனவே, முஸ்லிம் கல்லூரிகளின் முதல்வர்களே! தீனியாத்

வகுப்பு ஆசிரியர்களே! உங்கள் கல்லூரி முஸ்லிம் – மாணவ மாணவியர் இந்நூலை வாங்கிப் படித்து, முழுக்கு குறித்த முழுத் தகவல்களை அறிய, ஆவன செய்யுங்கள்! இதனால், இறையருளைப் பெற்றிடுங்கள்.

இந்நூலுக்கு இனிய மதிப்புரை வழங்கிய மதிப்பிற்குரிய **மவ்லானா, மவ்லவி A.E.M. அப்துர் ரஹ்மான் ஹஜ்ரத்** பெருந்தகைக்கும், அரிய அணிந்துரை வழங்கிய எமது கல்லூரி முதல்வர், கண்ணியத்திற்குரிய – **டாக்டர் தா. பிச்சை முஹம்மது M.A., Ph.D.** அவர்களுக்கும் இந்நூலினை ஆவல் பொங்க வெளியிட்டு மகிழும் சென்னை – **கலைஞானியம் பதிப்பகத்தார்க்கும்** எமது ஆழிய நன்றி என்றும் உரித்தாகும்.

முஸ்லிம் கலை – அறிவியல் கல்லூரிகளின் மாணவ மாணவியர், மற்றும் மகளிர் அரபிக் கல்லூரிகளின் (நிஸ்வான் மதரஸாக்கள்) மாணவியர் இந்நூலால் நற்பயன் எய்திட – எல்லாம் வல்ல அல்லாஹ் நல்லருள் புரிவானாக! ஆமீன்!

அன்பன்

**தேங்கை – ஷறபுத்தீன்**

1.1.03

இராஜகிரி

## பதிப்புரை

அல்லாஹுவின் கிருபையால் அருமையான பல, நல்ல நூல்களை எங்களின் சுலைமானியா பதிப்பகம் பதிப்பித்து வருகிறது. **'எழுத்துச் செம்மல்' M.R.M. அப்துர் ரஹீம்** அவர்கள் இயற்றிய சுய முன்னேற்றப் பயிற்சி நூல்கள், வாழ்வியல் வழிகாட்டி நூல்கள், வரலாற்று நூல்கள் ஆகியவற்றைப் பதிப்பிக்கும் வாய்ப்பினைப் பெற்ற நாங்கள் – சமீபத்தில் **ஆலிம் கவிஞர் தேங்கை ஷறபுத்தீன் மிஸ்பாஹி** அவர்களின் அரிய நூல்களைப் பதிப்பித்து வருகிறோம்.

**'சுந்தரத் தமிழில் சுப்ஹான மவ்லிது', 'கன்னித் தமிழில் கஸீதத்துல் புர்தா – பானத் சுஆத்', 'இறைமறையின் இதயம் யாஸீன் சூறா விரிவுரை'** போன்ற நூல்களை எமது பதிப்பிற்காக எழுதித் தந்த தேங்கை ஷறபுத்தீன் மிஸ்பாஹி அவர்கள் – இப்போது, முழுக்கு குறித்த முழுத் தகவல்களைத் தரும் இந்த முத்தான நூலினை – எமது பதிப்பிற்காக எழுதித் தந்துள்ளார்கள்.

இந்நூலின் ஆசிரியரான அவருக்கும், கணிணி எழுத்துக்களால் இதனை அச்சுக் கோர்த்த **மாஜீ கிராஃபிக்ஸ்** நிறுவனத்தார்க்கும், அழகுற அச்சிட்ட **மாஹின் பிரிண்டர்ஸ்** நிறுவனத்தார்க்கும் எமது நன்றி.

மேலும் இதுபோல் – நல்ல பல நூல்களைப் பதிப்பிக்க அல்லாஹ் அருள் பாலிப்பானாக! ஆமீன்.

**சுலைமானியா பப்ளிஷர்ஸ்**

1.1.03
சென்னை.

# சட்டத்தின் ஒளியில் கட்டாயக் குளியல்

அருள் மிக்கவனாகிய அல்லாஹ்வினால்—அவனுடைய திருத்தூதராகிய அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்களால் வழிகாட்டப்பட்ட வாழ்க்கை நெறியே 'இஸ்லாம்' ஆகும். இத்தகைய இஸ்லாம், வாழ்வின் அனைத்து துறைகளுக்கும் வழிகாட்டுகிறது. காலையில் எப்போது, எவ்வாறு கண்விழித்து எழ வேண்டும்?' என்பதில் தொடங்கி, இரவு எவ்வாறு படுக்கைக்குச் செல்ல வேண்டும்?' என்பது வரையுள்ள எல்லாவித நிலைகளுக்கும் இஸ்லாத்தில் இனிய வழிகாட்டுதல்கள் உள்ளன. இந்த நிலைகளில் ஒன்றதான், வயதுக்கு வந்த ஆணும் பெண்ணும் தன் வாழ்வில் அவ்வப்போது சந்திக்கிற 'கட்டாயக் குளியல்' என்ற நிலையாகும்.

## குளியலின் வகைகள்

மனிதன், தன் உடலில் படிந்த அழுக்குகளைப் போக்கவும், அசுத்தங்களை நீக்கவும், அருவருப்பூட்டும் துர்வாடையினை அகற்றவும், வெப்பத்தைத் தணிக்கவும், புத்துணர்வை அடையவும் அன்றாடம் குளிக்கும் வழக்கத்தை மேற்கொள்கிறான். இத்தகையக் குளியல்களை, 'கடமையான (ஃபர்ளான – வாஜிபான) குளியல், என்றும் சுன்னத்தான குளியல்' என்றும் இருவகையாக இஸ்லாம் பகுத்துள்ளது.

இவற்றில் – கடமையான குளியலுக்கு, ஐந்து காரணங்கள் அமைந்துள்ளன அவை. (1) விந்து வெளியேறுதல், (2) தூக்கத்தில் கனவுக்கலிதம் ஏற்படுதல், (3) ஆண்–பெண் இன உறுப்புகளில், ஒன்றுக்குள் மற்றொன்று நுழைதல், (4) மகளிர்க்கு மாதவிலக்கு ஏற்படுதல், (5) பிள்ளைப் பேற்று உதிரம் வெளியேறுதல் ஆகியவையாகும். இவற்றில் ஒவ்வொன்றையும் சற்று விரிவாக ஆய்வோம்.

## விந்தின் வெளியேற்றம்

ஆண்பெண் இரு பாலாரின் இன உறுப்புகளிலிருந்து, சிறுநீர் நீங்கலாக மூன்று வகை திரவங்கள் அவ்வப்போது வெளியேறுகின்றன. அவற்றில், 'வதீ' என்று அரபியில் அழைக்கப்படும் திரவமும் ஒன்றாகும். இந்தத் திரவம் சிறுநீர் கழித்து முடித்தவுடன், அல்லது சிறுநீர் கழிக்கத் தொடங்கும் போது ஓரிரு துளிகளாக வெளியேறும் இயல்புடையதாகும். இது, உடலின் வெப்ப மிகுதியினால் அல்லது பளு மிக்க பொருளைத் தூக்க நேரிட்டதால் வெளியேறக் கூடியதாகும். 'வெள்ளை' என்றோ வெட்டை என்றோ அழைக்கப்படும். இவ்வகை நீர் வெளியேறியதால் குளிக்க வேண்டிய அவசியமில்லை. இந்தத் திரவம் பட்ட இடத்தையும், இன உறுப்பையும் கழுவிய பின் ஒளுச் செய்தால் போதும்.

ஆண்–பெண் இருபாலாரும், ஒருவரையொருவர் கட்டித் தழுவுதல், முத்தமிடுதல், வருடுதல் போன்ற இன்பக் கேளிக்கைகளில் ஈடுபடுவதினால் – தண்ணீர் போன்ற நிறமுடைய – மென்மையான வழு வழுப்பான ஒரு வகைத் திரவம் இன உறுப்புத் துவாரத்தைச் சுற்றிக் கசியும். 'மன்மத நீர்' எனப்படும், இந்தத் திரவத்திற்கு அரபியில் 'மதீ' என்று கூறப்படுகிறது. இவ்வகைத் திரவம் வெளியேறியதாலும் குளிக்க வேண்டிய அவசியமில்லை. இந்தத் திரவம் பட்ட இடத்தையும் இன உறுப்பையும் கழுவிய பின் ஒளு செய்தால் போதும்.

மேற்கண்ட இருவகைத் திரவங்கள் வெளியேறியதாலும் கடமையாகாத குளியல்–விந்து வெளியேறினால் கடமையாகி விடும். 'இந்திரியம்' (Semen) எனப்படும் விந்து, 'நுத்ஃபா', 'மனீ' ஆகிய

சொற்களால் திருமறை குர்ஆனில் சுட்டிக்காட்டப் பட்டுள்ளது. வெளியேறிய திரவம், விந்து தான் என்பதை உறுதிப்படுத்த சில அறிகுறிகளை சட்ட நூல்கள் எடுத்துரைக்கின்றன. விந்து ஈரமாக இருக்கும் நிலையில் – பேரீச்சமரப்பாளை, பதனீர், குழைத்து வைத்த கோதுமை மாவு போன்றவற்றின் வாடையைப் பெற்றிருக்கும். காய்ந்து விட்ட விந்து, முட்டையின் வெள்ளைக் கருவின் வாடையைப் பெற்றிருக்கும். மேலும், விந்து வெளியேறும் போது உடலெங்கும் இன்ப அலையைப் பாய்ச்சுவதுடன் 'குபுக்'கெனக் குதித்துப் பாயும் இயல்பினையும் பெற்றிருக்கும். எனவே தான் திருமறை விந்து குறித்துச் சொல்லும் போது, "குதித்துப் பாயும் நீரிலிருந்து மனிதன் படைக்கப்பட்டான்" (அல்குர்ஆன்: 36:6) என்றுரைக்கிறது.

இத்தகைய விந்து, உடலுறவு கொள்ளாமலேயே சில நேரங்களில் வெளியேறும். ஆசைப் பெருக்குடன் ஒரு ஆண், பெண்ணைக் கட்டித் தழுவி முத்தமிடும் போதோ, அல்லது ஒருவரையொருவர் வருடி மகிழும் போதோ விந்து வெளியேறலாம். சிற்றின்ப நுகர்ச்சியின் எண்ணம் இதயத்தில் மேலோங்கி – அந்தக் கற்பனையில் மகிழ்ந்து இலயித்திருக்கும் போதும், விந்து வெளியேறலாம். தன் இன உறுப்பைத் தன் கையினால் தூண்டிவிடுவதினாலோ அல்லது தன் மனைவியின் அல்லது கணவனின் கையினால் தூண்டிவிடுவதினாலோ விந்து வெளியேறலாம். இவ்வாறு எந்த வகையில் விந்து வெளியேறினாலும் குளிப்பது கடமையாகும்.

ஆனால், மனைவியல்லாத மற்றவரின் கைகளினால் அல்லது கணவனல்லாத மற்றவரின் கைகளினால் விந்தினை வெளியேற்றுவது விலக்கப்பட்டதாகும். (ஹராமாகும்.) ஒருவர், தன்

சொந்தக் கைகளினால் விந்தினை வெளியேற்றினாலும் கூட அது. ஹராமான – விலக்கப்பட்ட– செயலாகும். ஏனெனில் 60 துளி இரத்தத்திற்கு நிகரான சக்தியை மனிதனுக்கு வழங்கும் ஒரு துளி விந்து– விழலுக்கு இறைத்த நீராக – வீணடிக்கப்படுவதை இஸ்லாம் அனுமதிக்கவில்லை.

## தூக்கக் கலிதம்

தூக்கத்தில் இன்பக் கனவுகளைக் கண்டதினால், அல்லது சிலவகை ஊட்டச்சத்து மிக்க உணவுகளை இரவில் உட்கொண்டதினால் அல்லது உடலுக்குள் ஏற்பட்டுவிட்ட வெப்ப சக்தியினால் தூக்கத்தில் கலிதம் ஏற்பட்டாலும் குளிப்பது கடமையாகும். தூக்கக் கலிதம், குளிப்பைக் கடமையாக்கும் இரண்டாவது காரணமாகும். காலையில் கண் விழித்துப் பார்த்தபோது உடலிலோ உடையிலோ விந்து படிந்திருப்பதை ஒருவர் பார்த்தால் அவர் மீது குளியல் கடமையாகி விட்டது. அந்த விந்து உலர்ந்து போயிருந்தாலும் சரியே அவர் நிச்சயமாக குளித்தாக வேண்டும்.

'இஹ்த்திலாம்' என்று அரபி மொழியில் கூறப்படும் கனவுக்கலிதம், ஆண்களுக்கு ஏற்படுவது போல் பெண்களுக்கும் ஏற்படும். இது குறித்து அங்கீகரிக்கப்பட்ட ஹதீஸுப் பெருநூல்களான ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹுல் முஸ்லிம் ஆகியவை கீழ்க்கண்ட ஹதீஸை எடுத்துரைக் கின்றன. அபூதல்ஹா (ரலி) அவர்களின் துணைவியார் உம்முஸுலைம் (ரலி) என்ற அம்மையார் நபிகளார் (ஸல்) அவர்களிடத்தில் வந்து, அல்லாஹ்வின் தூதரே! உண்மையை உரைப்பதில் அல்லாஹ் நிச்சயமாக வெட்கப்

படமாட்டான். எனவே, (நான்கேட்கிறேன்) ஒரு பெண்ணுக்குக் கலிதம் ஏற்பட்டால் குளிப்பது அவள் மீது கடமையாகுமா? என்றார். இதற்குப் பதிலளித்த நபி (ஸல்) அவர்கள் 'ஆம், ! அப்பெண் விந்து நீரைப் பார்த்தால் குளிப்பது அவள் மீது கடமையாகும்.' என்றார்கள். உடனே உம்முஸுலைம் அம்மையார் (வெட்கத்தால்) தன் முகத்தை மூடிவிட்டு, "அல்லாஹ்வின் தூதரே!பெண்ணுக்கும் கலிதம் ஏற்படுமா? என்று மறு கேள்வி கேட்டார்கள். அதற்கு நபியவர்கள், "ஆம்! (அவ்வாறில்லை யெனில்) பெண்ணின் குழந்தை ஏன் பெண்ணின் சாயலைப் பெறுகிறது? ஆணின் விந்து வெண்மையாகவும் அடர்த்தியாகவும், பெண்ணின் விந்து மஞ்சளாகவும் மென்மையாகவும் அமைகிறது. எனவே ஆண்–பெண் ஆகிய இவ்விருவரில், எவரிலிருந்து வெளியேறும் விந்து, முந்துகிறதோ அவரின் சாயலில் குழந்தை அமைகிறது" என்று பதிலளித்தார்கள். இந்த ஹதீஸை அண்ணலாரின் துணைவியருள் ஒருவராகிய உம்மு ஸல்மா (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

"ஒரு மனிதருக்குத் தூக்கத்தில் கலிதம் ஏற்பட்ட நினைவில்லை. ஆனால் அவர் தன் ஆடையில் அல்லது மேனியில் ஈரத்தன்மையை (கண் விழித்ததும்) பார்த்தாரெனில் அவர் மீது குளிப்பது கடமையாகுமா?" என்ற கேள்விக்கு, நபி (ஸல்) அவர்கள் பதிலளிக்கையில், இத்தகையவர் குளிக்க வேண்டும் என்றார்கள். "கலிதம் ஏற்பட்டதாகக் கனவு கண்டவர், (கண் விழித்ததும்) தன் ஆடையில் அல்லது மேனியில் ஈரத்தைக் காணவில்லையென்றால் அவர் மீது குளியல் கடமையாகுமா?" என்ற கேள்விக்கு, நபி (ஸல்) அவர்கள் பதிலளிக்கையில் "இத்தகையவர் குளிக்க வேண்டியதில்லை" என்றார்கள். அன்னை ஆயிஷா (ரலி) அறிவித்த

இந்த ஹதீஸிலிருந்து, 'கனவுக் கலிதத்திற்காகக் குளிக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட வேண்டுமெனில், கண் விழித்தவுடன் உடலிலோ, உடையிலோ விந்தின் ஈரம் படிந்திருக்க வேண்டும்' என்ற தகவல் தெரிய வருகிறது.

## இனவுறுப்புகளின் சங்கமம்

குளியலைக் கடமையாக்கும் மூன்றாவது காரணம் ஆணுறுப்பின் தலைப்பகுதி - அதாவது- மொட்டுப்பகுதி பெண்ணுறுப்புக்குள் புகுந்து மறைந்திருத்தலாகும்.

நபிமணி (ஸல்) அவர்கள் நவின்றார்கள். "உங்களில் எவராவது (மனைவியாகிய) அவளின் நான்கு கிளைகளுக்கு (இரண்டு கால்கள், இரண்டு கைகள்) மத்தியில் அமர்ந்த பின் அவளைப் புணர்ந்தால்-விந்து வெளியேறா விட்டாலும் கூட குளிப்பது கடமையாகி விட்டது"

*அறிவிப்பாளர்:அபூஹுரைரா (ரலி)*
*தகவல்:புகாரீ -முஸ்லிம்*

ஆயிஷா நாயகி (ரலி) அறிவித்தார்கள். "(ஆணின்) 'கத்னா' செய்யப்பட்ட மொட்டுப்பகுதி (பெண்ணின்) குறிக்குள் கடந்(து மறைந்)தால் குளிப்பது கடமையாகி விட்டது" என்று, அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். எனவே, நானும் இறைதூதர் (ஸல்) அவர்களும் இவ்வாறு செய்ததினால் நாங்கள் குளித்தோம்.

*(தகவல்: திர்மீதி, இப்னுமாஜா)*

பெண்ணுறுப்புக்குள் ஆணுறுப்பின் மொட்டுப் பகுதியைப் புகுத்தியதால்-விந்து, வெளியேறினாலும் வெளியேறாவிட்டாலும்-புகுத்தியவர், புகுத்தப்பட்டவர் ஆகிய இருவர் மீதும் குளியல்

கடமையாகும். இவ்வாறு இனவுறுப்புகளில் ஒன்றை மற்றொன்றுக்குள் புகுத்தியோர், கணவன்–மனைவியாக இருந்தாலும், இல்லாவிட்டாலும் இருவர் மீதும் குளியல் கடமையாகிவிட்டது.

ஒரு ஆடவன், ஒரு பெண்ணை அச்சுறுத்தி மிரட்டி, வலுக்கட்டாயமாகப் போராடி, அவளின் உறுப்புக்குள் தன்னுறுப்பின் மொட்டுப் பகுதியை மட்டும் ஒரு கணம் புகுத்தினாலும் – விந்து வெளியேறா நிலையிலும் கூட–இரு தரப்பினர் மீதும் குளியல் கடமையாகும். மயக்கமுற்றுக் கிடக்கும் பெண்ணின் அல்லது ஆழ்ந்த தூக்கத்திலிருக்கும் பெண்ணின் உறுப்புக்குள், ஒரு ஆடவன் தன் உறுப்பின் தலைப்பகுதியை மட்டும் புகுத்திவிட்டு உடனடியாக எடுத்தாலும் இரு தரப்பினர் மீதும் குளியல் கடமையாகிவிட்டது. தூக்கத்திலிருந்து எழுந்த பின் – அல்லது மயக்கம் தெளிந்தபின் – அந்தப் பெண் தனக்கேற்பட்ட நிலையை உணர நேரிடும் போது குளித்தாக வேண்டும்.

பருவம் வராத சிறுமியின் உறுப்புக்குள் ஒரு ஆடவன் தன் உறுப்பின் தலைப்பகுதியை புகுத்தினால், அல்லது பத்து வயது சிறுவனின் உறுப்புடைய தலைப்பகுதியை – பருவமடைந்த ஒரு பெண், தன்னுடைய உறுப்புக்குள் புகுத்தினால் இவ்விரு கட்டங்களிலும் பருவமடையாத ஆண் – பெண் மீது குளியல் கடமையில்லை. எனினும் நிலையை அறிய நேரிடும் பெற்றோர்கள் தம் பிள்ளைகளைக் கண்டிக்கும் போது அல்லது கனிவாய் அறிவுறுத்தும் போது அப்பிள்ளைகளைக் குளிக்குமாறு தூண்ட வேண்டும். இவ்வாறு தூண்டுவது ஷாபி மத்ஹபில் பெற்றோர்களின் மீது கடமையாகிவிட்டது.

திருமணமானபின், கணவன் மனைவி என்ற உரிமையற்ற அன்னிய ஆணும் பெண்ணும் இந்தப் பாவத்தைச் செய்தால் அவர்களைக் கல்லால் எறிந்து கொல்ல வேண்டுமென்றும், திருமறை–நபிமொழி வழிவந்த இஸ்லாமியக் குற்றவியல் சட்டம் கூறுவது, இங்கு நினைவு கூரத்தக்கதாகும்.

குளியலைக் கடமையாக்கும் மேற்கண்ட மூன்று நிலைகளில் அதாவது, விந்து வெளியேறுதல், கனவுக்கவிதம், விந்து வெளியேறாவிட்டாலும் கூட ஆண்–பெண் இருபாலாரின் இன உறுப்புகளில் ஒன்று மற்றொன்றிற்குள் சுமார் ஒரங்குலமேனும் நுழைதல், ஆகிய மூன்று நிலைகளில்–ஏதேனும் ஒரு நிலை ஒரு ஆணையோ– பெண்ணையோ அடைந்தால் அந்த ஆணும் பெண்ணும், **'ஜனாபத்'** உடையவர் அல்லது **'ஜுனுபு'** என்று அரபி மொழியில் அழைக்கப்படுவார்.

## ஜனாபத் உடையோர்க்கு விலக்கப்பட்ட செயல்கள்

இத்தகைய 'ஜனாபத்' ஏற்பட்ட 'ஜுனுபு'கள், குளித்துத் தூய்மையாகும் வரை சில புனிதச் செயல்களைச் செய்யலாகாதென குர்ஆனும் ஹதீஸும் கூறுகின்றன.

**"நீங்கள் ஜனாபத் உடையவர்களாக இருந்தால் (குளித்து) சுத்தமாகுங்கள்)"**

(குர்ஆன் 5:6)

**"நம்பிக்கையாளர்களே! நீங்கள் ஓதுவது என்னவென்று நீங்கள் அறியாத அளவுக்குப் போதையுற்றவர்களாக இருக்கும்**

**நிலையிலும், ஜனாபத் உடையவர்களாக இருக்கும் நிலையிலும் நீங்கள் குளிக்கும்வரையிலும் தொழுகைக்கு நெருங்காதீர்கள். ஆனால், ஜனாபத் உடைய உங்களுக்குப் பள்ளியைக் கடந்து செல்ல வேண்டிய அவசிய நிலை ஏற்பட்டால், பாதையைக் கடந்து செல்பவர்களாகவே தவிர பள்ளியில் தங்காதீர்.**

(குர்ஆன் 4:43)

மேற்கண்ட இரு திருவசனங்களின் மூலமும் இன்னும் பல்வேறு ஹதீஸ்களின் மூலமும் இஸ்லாமியச் சட்ட வல்லுனர்கள் கீழ்க்கண்ட செயல்கள், ஜனாபத் உடையோர்க்கு விலக்கப் பட்டுள்ளன என்று வரையறுத்துள்ளனர். அவை வருமாறு:-

1. கடமையான மற்றும் ஸுன்னத்தான் நஃபிலான தொழுகை களெதுவுமே நிறைவேற்றுதல் கூடாது. ஜனாஸாத் தொழுகையும் இவற்றுள் அடங்கும். தொழுகையை நிறைவேற்றவியலாத ஜனாபத் நிலையில், தொழுகையின் ஒரு அங்கமாகிய 'ஸஜ்தா'வைக் – குர்ஆனின் சஜ்தா வசனம் ஓதக் கேட்கும் போது– செய்வதும் கூடாது.

2. ஜனாபத் உடையவர்களும், மாதவிலக்கு மங்கையரும் குர்ஆனிலிருந்து எதையுமே ஓதக்கூடாது" என்று நபி மணி (ஸல்) அவர்கள் கூறியதாக அப்துல்லாஹிப்னு உமர் (அலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள் (தகவல் :திர்மிதீ) எனவே, குர்ஆனின் திருவசனங் களில் எதையுமோ, குர்ஆனின் திருவசனம் என்ற நிய்யத்துடன் –நினைப்புடன்–ஓதலாகாது. ஆனால், உண்ணத் தொடங்கும் போது, "பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்" என்றோ உண்ட பின்னர் 'அல்ஹம்து லில்லாஹி' என்றோ. துயரச் செய்தியைச் செவியுற நேரிடும் போது "இன்னா லில்லாஹி வஇன்னா இலைஹி

ராஜிஊன்'' என்றோ, வாகனம் புறப்படும் போது, ''ஸுப்ஹானல்லதீ ஸக்கரலனா ஹாதா, வமாகுன்னா லஹு முக்ரினீன் என்றோ, வியப்புச் செய்தியைத் தெரிய நேரிடும் போது 'ஸுப்ஹானல்லாஹ்' என்றோ கூறுவதில் தவறில்லை. இவ்வாறு கூறும் போது குறிப்பிட்ட செயலுக்கான குறிப்பிட்ட 'விர்து' அல்லது 'திக்ர்' என்ற எண்ணம் தான் இதயத்தில் மேலோங்க வேண்டும்.

குளியல் கடமையானவர்கள் புனிதக்குர்ஆனைத் தொடக் கூடாது. ஒலுவில்லாதவர்கள் ஒலுச் செய்துவிட்டால் அவர்கள் தூய்மையாளர்கள் ஆகின்றனர். குளியல் கடமையானவர்கள் குளித்துவிட்டால் அவர்களும் தூய்மையாளர்கள் ஆகின்றனர். ஈமானில்லாதவர்கள் ஈமான் கொண்டால் அவர்களும் தூய்மையாளர்கள் ஆகின்றனர். இந்த மூன்று வகை தூய்மையாளர்களில், முதலிரு வகையினர் புறத்தூய்மையாளர்கள்' ஆகவும், மூன்றாம் வகையினர் அகத்தூய்மையாளர்கள் ஆகவும் அமைகின்றனர். (குர்ஆனாகிய) இதனைத் தூய்மையானவர்களைத் தவிர (வேறெவரும்) தொடமாட்டார்கள்'' ''(குர்ஆன் 56:79)'' எனும் திருவசனம், புறத்தூய்மையாளர்களையும் அகத்தூய்மையாளர் களையும் உள்ளடக்கும்.

எனவே, இந்தத் திருவசனத்திற்கு ''(குர்ஆனாகிய) இந்த வாக்கு, தூய்மையான வானவர்களின் வாயிலாக வந்துள்ளது. இதில், ஷைத்தான்களின் எவ்விதத் தலையீடும் இல்லை'' என்று, திருமறையின் சில மொழி பெயர்ப்புகள் அடிக்குறிப்பு எழுதியுள்ளன. இந்த அடிக்குறிப்பு, இந்தத் திருவசனம் அருளப்பட்டதற்கான சூழ்நிலையைச் சுட்டிக் காட்டினாலும் இந்தத் திருவசனம் மூலமே, புனித குர்ஆனை ஒலுவில்லாதவர்களும், குளியல் கடமையானவர்

களும் தொடக்கூடாது என்ற விதி முறையை இஸ்லாமியச் சட்டவல்லுனர்கள் வகுத்துள்ளனர். ஏனெனில் குர்ஆனின் வசனங்கள் அனைத்துமே, ஒரு குறிப்பிட்ட நிலையை விளக்க, ஒரு குறிப்பிட்ட காரணத்திற்காக அருளப் பட்டிருந்தாலும் அந்த வசனங்களைப் படிக்கும்போது அவை உணர்த்தும் புறப்பொருளும் சட்ட ஆய்விற்குட்பட்டவையாகும். இஸ்லாமியச் சட்டம் இத்தகைய நிலையில் தொகுக்கப்பட்டதுதான் என்பதில் ஐயமில்லை.

ஒலு செய்வது கடமையான நிலை, "சிறிய அசுத்த நிலை" (ஹதஸுன் அஸ்ஃகர்) என்றும், குளியல் கடமையான நிலை 'பெரிய அசுத்த நிலை' (ஹதஸுன் அக்பர்) என்றும் அழைக்கப்படுகிறது. எனவே, (ஒலு கடமையான) சிறிய அசுத்த நிலையில், குர்ஆனைக் கையால் தொடுவது, மட்டும் தான் கூடாது. ஆனால் (குளியல் கடமையான) பெரிய அசுத்த நிலையில் குர்ஆனைக் கையால் தொடுவதும் கூடாது. நாவால் குர்ஆன் வசனங்களை உச்சரிப்பதும் கூடாது.

4. குளியல் கடமையானவர்கள் புனித கஃபாவை 'தவாபு' செய்யக்கூடாது. 'தவாபு' என்பது தொழுகைக்கு நிகரான ஒரு தூய அமலாகும். ஒரு பள்ளியில் நுழைகிறவர், அந்தப் பள்ளிக்குக் காணிக்கையாக இரண்டு 'ரக்அத்துகள் தஹிய்யத்' தொழுவது, சுன்னத்தாக அமைவது போல், புனித மஸ்ஜிதுல் ஹராம் பள்ளிக்கு காணிக்கைத் தொழுகை நிறைவேற்றுகிற இடத்தைப் புனித கஃபாவைத் தவாபு செய்யும் அமல் எடுத்துக் கொள்கிறது. எனவே குளிப்பு கடமையானவர்கள் கஃபாவைத் தவாபுச் செய்யக்கூடாது.

5. குளிப்பு கடமையானவர்கள் பள்ளிவாசலுக்குள் படுப்பதோ, அமர்வதோ கூடாது. ஒருவர், "இஃத்திகாஃப்" என்ற

எண்ணத்துடனோ அல்லது அந்த எண்ணமில்லாமல் வேறு நோக்குடனோ பள்ளிவாசலுக்குள் படுத்துறங்கினால் அவர் மிகக் கவனமாக இருக்க வேண்டும். பள்ளிக்குள் படுத்துறங்கியவருக்கு நள்ளிரவில் கனவுக்கலிதம் ஏற்பட்டதெனில், அவர் கண்விழித்து நிலைமையை உணர்ந்த மறுகணமே பள்ளியின் உட்பகுதியை விட்டு வெளியேறியாக வேண்டும். அவரின் ஆடையில் படிந்த விந்து, பள்ளிவாசல் பாயிலோ விரிப்பிலோ, தரையிலோ பதிந்திருக்கிறதா? என்று நன்கு கவனித்து, அவ்வாறு பதிந்திருந்தால் உடனடியாக அந்த இடத்தைத் தண்ணீர் மூலம் சுத்தப்படுத்த வேண்டும். ஏனெனில் பள்ளியை அசுத்தப்படுத்துவது ஹராமாகும்.

குளியல் கடமையாகிவிட்டால், செய்யக் கூடாத மேற்கண்ட ஐந்து விஷயங்களில், இரண்டாவதாகக் கூறப்பட்ட 'குர்ஆனின் திருவசனங் களை ஓதுதல்' என்ற விஷயமும் தற்போது ஐந்தாவதாகக் கூறப்பட்ட 'பள்ளியில் தங்குதல்' என்ற விஷயமும் குளியல் கடமையானோர்க்கு மாத்திரம் விலக்கப்பட்டவையாகும். ஏனையை மூன்று விஷயங்களும் குளியல் கடமையானோர்க்கும், ஒலு செய்வது கடமையானோர்க்கும் சேர்த்து ஒரு சேர விலக்கப்பட்டவையாகும். குளியல் கடமையானோர், பள்ளியில் தங்கிடத்தான் அனுமதியில்லை. அவசியச் சூழலில் பள்ளிக்குள் தாண்டிச் செல்வதில் தவறில்லை. முன்னர் கூறப்பட்ட திருவசனத்தில் இந்தக் கருத்து புலப்படுகிறது.

## குளிப்பின் கடமைகள் (ஹனபி மத்ஹபில்)

குளிப்பின் கடமைகள் – ஹனபி மத்ஹபின் படி–மூன்றாகும். அவற்றுள் முதலாவது கடமை, வாயிற்குள் நீர் செலுத்துவதாகும்,

வாயிற்குள் செலுத்தப்பட்ட நீரினால் வாயின் உட்பகுதி முழுவதும் நனைந்து விட்டாலே கடமை நிறைவேறிவிடும். தண்ணீரை வாயிற்குள் வைத்து அசைத்துக் கொப்பளிக்க வேண்டும் என்பது அவசியமில்லை. எனவே, குளிப்பவரின் பற்கள் ஒட்டையாக இருந்து அந்த ஒட்டையை உணவுப் பொருளின் எஞ்சிய பகுதி அடைத்திருந்தால் அந்த நிலை குளியலுக்குத் தடங்கலாகாது. எனினும், பற்களிடையே எஞ்சிய உணவுப் பகுதியை அகற்றிவிட்டு, அதற்கடிப்புறத்திலும் தண்ணீரை அடையச் செய்வது மிகவும் பேணுதலாகும். ஆனால் பற்களின் மேற்பகுதியிலோ, ஈறுகளிலோ சவிங்கம் (Chewingum) போன்ற பொருட்கள் ஒட்டியிருந்தால் அவற்றை அகற்றிவிட்டு, அவை ஒட்டியிருந்த இடத்தையும் தண்ணீர் அடையச் செய்ய வேண்டும்.

குளிப்பின் இரண்டாவது கடமை, நாசிக்குள் நீர் செலுத்துவதாகும். எனவே, மூக்கினுள் சளி, நன்கு காய்ந்து, மூக்கின் உட்புறச் சுவரோரம் ஒட்டியிருந்தால், குளியலின் போது அந்தக் காய்ந்த சளியை விரல் விட்டு தோண்டி வெளியே எடுத்தாக வேண்டும். இல்லையெனில் காய்ந்த சளி ஒட்டியிருந்த இடத்தின் அடிப்பகுதியில் தண்ணீர் படும் வாய்ப்பு இல்லாமலாகி விடும்.

குளிப்பின் மூன்றாவது கடமை உச்சி முதல் உள்ளங்கால் வரை உடல் முழுவதும் தண்ணீர் படும்படி செய்யவேண்டும். இவ்வாறு உடல் முழுவதும் தண்ணீரை அடையச் செய்யும் போது உடலில் எந்தப் பகுதியிலும் தண்ணீர் சேருவதைத் தடுக்கும் பொருட்கள் ஒட்டியிருக்கக் கூடாது. எனவே, நகத்தடியில் அழுக்கிருந்து அந்த அழுக்கின் அடிப்பகுதியில் தண்ணீர் சேரவியலாத நிலை ஏற்பட்டால் குளியல் அங்கீகாரமாகாது.

தண்ணீர் பட்டவுடனேயே கரைந்துவிடும் மண், களிமண் போன்றவை நகத்தடியில் ஒட்டியிருந்தால், அந்நிலை குளியல் சரியாவதற்குத் தடங்கலாகாது. பெண்களில் எவருக்கேனும் சடைமுடியிருந்தால்– குளிக்கும்போது அச்சடையை உடைக்க வேண்டும் என்று அவசியமில்லை. ஆனால் அவளின் சடைமுடியின் அடிப்புறத்தில் தண்ணீரை அடையச் செய்வது அவசியமாகும். சடை பிடிக்காத முடியானால், பெண்கள் தமது கொண்டையை அவிழ்த்து அல்லது கூந்தலின் பின்னலைப் பிரித்து தலையில் முடிமுளைக்கும் தலைத்தோல் பகுதிவரைத் தண்ணீரைச் சேர்ப்பது அவசியமாகும். பெண்களுக்கே விதிமுறை இவ்வாறிக்கும் போது, ஆண்கள் விஷயத்தில் சொல்லத் தேவையில்லை. ஆண்கள் தமது, தலை, மற்றும் தாடியில் முடி முளைக்கும் இடத்திலும் தண்ணீரைச் செலுத்தியாக வேண்டும். வாய், மூக்கு ஆகிய ஈரிடங்களிலும் தண்ணீர் செலுத்தி, உட்புறம் முழுவதையும் தண்ணீர் படச் செய்வது அவசியமென்றுரைத்ததால், பெண்கள் தமது இன உறுப்புக்குள் தண்ணீர் செலுத்தியோ–விரலைப் புகுத்தியோ கழுவுவதும் அவசியமென எண்ணிவிட வேண்டாம். ஆனால் ஆண்களும் பெண்களும் தமது தொப்புள் கண்குழி போன்ற சுருங்கிய பள்ளங்களில் விரலைப் புகுத்தியும் தண்ணீர் செலுத்தியும் கழுவுவது அவசியமாகும்.

## குளிப்பின் கடமைகள் (ஷாபி மத்ஹபில்)

ஷாஃபி மத்ஹபின் படி குளிப்பின் கடமைகள் (பர்ளுகள்) இரண்டாகும். அவற்றுள் முதலாவது கடமை, ''ஜனாபத்தை நீக்கிட என் மீது கடமையான குளியல் குளிக்கிறேன்''. என்று மனதால்

எண்ணுவது (நிய்யத் செய்வது) ஆகும். இந்த நிய்யத், உடலில் தண்ணீர்படும் முதல் உறுப்புடன் இணைக்கப்பட்டிருக்க வேண்டும். அதாவது தண்ணீரை அள்ளி முதலில் தலையில் ஊற்றினாலும் அல்லது தோளிலோ, கையிலோ, காலிலோ ஊற்றினாலும் முதலில் எந்த உறுப்பில் தண்ணீர் ஊற்றுகிறோமோ அந்த உறுப்பில் தண்ணீர் பட்டவுடனேயே நிய்யத் செய்ய வேண்டும். நிய்யத் இல்லாமல் தலையிலும் இரு தோள்களிலும் தண்ணீர் ஊற்றிய பின்னர் நிய்யத் விடுபட்டுப் போன நிலை நினைவுக்கு வரவே – இடையில் நிய்யத் செய்தால், நிய்யத்திற்கு முன்னர் தண்ணீர் ஊற்றிய தலையிலும் இரு தோள்களிலும் மீண்டும் தண்ணீர் ஊற்ற வேண்டும். ஹனபி மத்ஹபின் படி குளியலுக்கு நிய்யத் செய்வது கடமை (பர்ளு) இல்லை.

குளிப்பின் இரண்டாம் பர்ளு, உடல் முழுவதும் – ஒரு உரோம அளவு இடைவெளி கூட இல்லாமல்– தண்ணீர் படச் செய்வதாகும்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள். "ஜனாபத் ஏற்பட்ட பின் ஒரு உரோம அளவு இடத்தைக் கூட தண்ணீர் படாமல் விட்டு விட்டால் அந்த உரோமம் நரகில் இவ்வாறு இவ்வாறு (வேதனை) செய்யப்படும்." (அறிவிப்பாளர் அலி (ரலி) தகவல்: அபூதாவூது) அண்ணலாரின் இந்த அமுத வாக்கை அறிவித்த அலி (ரலி) அவர்கள், இது குறித்துத் தன்னிலையைக் கூறும் போது, "என் தலை (முடி)யை இதனால் யான் எதிரியெனக் கருதினேன்" (அதாவது, வளரவிடாமல் அவ்வப்போது கத்தரித்து வந்தேன்) என்று கூறினார்கள்.

ஜனாபத் ஏற்பட்டவர்கள், தமது நகம், முடி போன்றவற்றைக் குளியலுக்கு முன்னர் அகற்றாமலிருப்பதே விரும்பத்தக்கதாகும். ஆனால், அகற்றினால் தவறில்லை. குளியலுக்கு முன், உடலை

விட்டு உதிர்ந்த உரோமங்களைத் தனியாகத் திரட்டிவைத்துக் கழுவ வேண்டிய அவசியமில்லை.

உடலில் புறப்பகுதி முழுவதையும் குளியலின் போது கழுவுவது கடமையாகும். புறப்பகுதி என்பதில், நகங்களின் அடிப்புறம், உரோமங்களின் மேற்புறம்;கீழ்புறம்; குளியலுக்கு முன் அகற்றப்பட்ட முடிகள் முளைத்த இடத்தின் வெளிப்புறம்; காது மடலின் உள்பகுதியில் வெளிப்பார்வையில் தெரியுமிடம்; தன்னிரு பாதங்களை நிலத்திலூன்றி தரையில் ஒரு பெண் உட்காரும்போது, அவளின் இனவுறுப்பிலிருந்து வெளியில் தென்படும் பகுதி, ஆகிய ஆறு இடங்களும் அடங்கும்.

முடியின் முடிச்சுக்களை அவிழ்த்துக் கழுவ வேண்டும். ஆனால் இயல்பாக தானாகவே முடிச்சு ஏற்பட்ட முடியின் உட்புறத்தைக் கழுவவேண்டிய அவசியமில்லை. ஆண்களோ, பெண்களோ தமது கைவிரல்களிலுள்ள மோதிரங்கள் உள்ளே நீர்ப்புகவியலாத அளவுக்கு இறுக்கமாக ஒட்டியிருந்தால் அவற்றை அசைத்து உள்ளே நீர்ப்புகச் செய்ய வேண்டும். பெண்கள் அணியும் கம்மல், போன்ற காதணி நிலையும் இவ்வாறு தான்.

கடமையான ஜனாபத் குளியலின் போது—வாய் கொப்பளித்தலும், நாசிக்கு, நீர் செலுத்தலும் 'குளியலின் கடமைகள்' என்று ஹனபி மத்ஹபில் சட்டம் அமைந்திருப்பது போன்று ஷாபி மத்ஹபில் சட்டம் அமையவில்லை. ஷாபி மத்ஹபின் படி வாய் கொப்பளித்தலும், நாசிக்கு நீர் செலுத்தலும் குளியலின் பர்ளு அல்ல;சுன்னத் ஆகும். எனினும் இந்த சுன்னத்தினைத் தவிர்ப்பது மக்ரூஹ் ஆகும்.

குளியலின் போது, உடலின் எந்தப் பகுதியிலும் தண்ணீர் சேருவதைத் தடுக்கும் தார், அரக்கு, பெயிண்ட், நகப் பாலிஷ் போன்ற – தடங்கல்கள் இருந்தால் அவை அகற்றப்பட்டாக வேண்டும். உடலில் எங்காவது ஏற்பட்ட காயத்திற்கு கட்டு போடப்பட்டிருந்தால் – அந்தக் கட்டைப் பிரிக்கவியலாத சூழல் ஏற்பட்டால் – குறிப்பிட்ட பகுதியில் குளியலின் தண்ணீர் படாத நிலையை ஈடுகட்ட தயம்மும் செய்ய வேண்டும்.

ஒளுவின் உறுப்புகளில் எங்காவது தண்ணீர் படவியலாத நிலை ஏற்பட்டால் அதை ஈடு கட்ட – ஒளுவுக்குப் பதில் தயம்மும் செய்வது போன்று தான், குளியலின் உறுப்புகளில் (அதாவது முழு உடலில்) எங்காவது தண்ணீர் படவியலாத நிலை ஏற்பட்டால்–அதை ஈடுகட்ட – குளியலுக்குப் பதில் 'தயம்மும்' செய்ய வேண்டும். குளியலுக்குப் பதிலான தயம்முமிற்கும் ஒளுவுக்குப் பதிலான தயம்முமிற்கும் செய்முறையில் வேறுபாடு எதுவுமில்லை.

குளியலின் போது, உடல் முழுவதிலும் இம்மியும் இடைவெளியின்றி தண்ணீர் சென்றடைந்து விட்டது, என்ற எண்ணம் மேலோங்கி இருந்தால் போதுமானது. உறுதிப்பாடு இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை.

குளித்து முடித்துவிட்ட பின் ஒரு ஆணின் இன உறுப்பிலிருந்து விந்து வெளியேறினால், அவர் மீண்டுமொரு முறை குளிக்கவேண்டும். ஆனால் ஒரு பெண் குளித்து முடித்த பின், அவளின் இனவுறுப்பிலிருந்து விந்து வெளியேறினால், அவள் மீண்டும் குளிக்க வேண்டுமா? அல்லது வேண்டாமா? என்பதைத் தீர்மானிக்க – அவளின் குளியலுக்கு முந்தைய நிலையைக்

கவனிக்க வேண்டும். குளியலுக்கு முன் அவள், ஆடவருடன் உடலுறவு கொண்டபோது அவளின் ஆசை நிறைவேற்றப்பட்டதாக இருந்ததுடன், குளியலுக்குப்பின் அவளுறுப்பிலிருந்து வெளியேறிய விந்து அவளுக்கு இன்பவுணர்ச்சியைத் தந்திருக்குமானால் அவள் மீண்டும் குளிப்பது கடமையாகும்.

இவ்வாறில்லாமல், ஒரு பெண் மயக்க நிலையிலோ அல்லது வலுக்கட்டாயமாகவோ உடலுறவு கொள்ளப்பட்டு, இதனால் அவள் துன்பத்தையன்றி இன்பத்தையடையாத நிலைக்கு ஆளானாள், என்று வைத்துக் கொள்வோம். இந்நிலையில் அவள் குளித்து முடித்தபின், அவளின் இனவுறுப்பிலிருந்து–இன்பவுணர்ச்சியில்லாமல்–வெளியேறிய விந்திற்காக அவள் மீண்டும் குளிக்க வேண்டிய அவசியமில்லை. ஏனெனில், அவளின் உறுப்பிலிருந்து குளியலுக்குப்பின் இன்பவுணர்ச்சியின்றி வெளியேறிய விந்து. அவளுடைய விந்தில்லை. அவளுடன் உடலுறவு கொண்ட ஆடவனின் விந்து தான், அவளுறுப்புக்குள் புகுந்து விட்டு–கருவறையைச் சென்றடையாமல்–சிறிது நேரத்திற்குப்பின் மீண்டும் வெளியில் வந்து விட்டது, என்று கருத வேண்டும். எனவே அவள் மீண்டும் குளிக்க வேண்டிய அவசியமில்லை.

## கோமான் நபி (ஸல்) குளித்த விதம்:

குளியலின் 'பர்ளு'களைத் தெரிந்து கொண்ட பின் – குளியலின் சுன்னத்துக்கள் யாவை? என்பதை 'ஹனபி – ஷாபி' ஆகிய மத்ஹபுகளின் அடிப்படையிலும் நாம் தெரிய வேண்டும். அதற்கு முன்னர், 'அண்ணல் நபி (ஸல்) அவர்கள், எவ்விதமாகக் குளித்தார்கள்?' என்று, அன்னை ஆயிஷா (ரலி) அன்னை மைமூனா

(ரலி) போன்ற பெருமாட்டிகளும், ஏனைய அறிவிப்பாளர் (ராவி)களும் தருகிற தகவல்களின் அடிப்படையில் ஸஹீஹுல் புகாரியின் ஹதீஸ்களைத் தொகுத்துப் பார்த்தால், கோமான் நபி (ஸல்) அவர்கள் கடமையான (ஜனாபத்) குளியலை நிறைவேற்றிய முறையை நாம் உணரலாம். அம்முறை பின்வருமாறு:-

"நபி மணி (ஸல்) அவர்கள், தன்னுடைய கடமையான குளியலை நிறைவேற்றும் போது முதலில், தன் மறைவுறுப்பை இடது கையினால் கழுவுவார்கள். பின் தன் மேனியில் படிந்த விந்தினைக் கழுவுவார்கள். பின்னர், வலது கையினால் தண்ணீரை அள்ளி இடது கையினைக் கழுவுவார்கள். பிறகு தனது (இடது) கையை சுவற்றில் அல்லது பூமியில் மண்ணைக் கொண்டு தேய்த்துக் கழுவுவார்கள். பின்னர், இரண்டு அல்லது மூன்று முறை தன்னுடைய இரண்டு முன் கைகளையும் கழுவுவார்கள்.

பிறகு, தன்னிரு கால்களையும், விட்டு விட்டு – தொழுகைக்கு ஒலுச் செய்வது போல்– ஒலுச் செய்வார்கள். அப்போது தன் விரல்களைத் தண்ணீரில் முக்கி, அதனால் தலைமுடியின் அடிப்பாகத்தைக் கோதி விடுவார்கள். பின்னர், தன் தலை மீது மூன்று முறை தண்ணீர் ஊற்றுவார்கள். அவ்வாறு ஊற்றும்போது– முதலில், தலையின் வலப்புறமாகவும், பின் இடப்புறமாகவும், தண்ணீர் ஊற்றுவார்கள். அப்போது, தன்னிரு கைகளால் தலையைத் தேய்ப்பார்கள். பின்னர், வாயைக் கொப்பளித்து மூக்கிற்குத் தண்ணீரைச் செலுத்துவார்கள். பிறகு தன்னுடைய உடல் முழுதும் தண்ணீரை ஊற்றுவார்கள். பின்னர் சிறிது நகர்ந்து நின்று தனது இரு கால்களையும் கழுவுவார்கள்.

பல்வேறு ஹதீஸ்களின் மூலமாகத் தெரியவரும். இந்தக் குளியல் முறையிலிருந்து, குளியலின் சுன்னத்துக்கள் என்று 'ஹனபி–ஷாபி' ஆகிய இரண்டு மத்ஹபுகள் குறிப்பிடுபவற்றைப் பார்ப்போம்.

## ஹனபி மத்ஹபின் படி குளியலின் சுன்னத்துக்கள்7

1. 'ஜனாபத்தை நீக்குவதற்காக– என் மீது கடமையான குளியலை நிறைவேற்றுகிறேன்' என்று நிய்யத் செய்தல்.
2. 'பிஸ்மில்லாஹ்' கூறிவிட்டுக் குளித்தல்
3. மணிக்கட்டுவரை, இரண்டு கைகளையும் கழுவுதல்
4. மர்மஉறுப்பைக் கழுவுதல்
5. உடல், மற்றும் உடையில் படிந்த அசுத்தத்தைக் கழுவுதல். (ஹனபி மத்ஹபின் படி விந்து, சிறுநீரைப் போல் அசுத்தமானது)
6. ஒலுச் செய்தல்
7. தலை, இரு தோள்புயங்கள் மற்றும் உடல் முழுவதிலும் மும்முறை தண்ணீர் ஊற்றுதல்.

## ஷாபி மத்ஹபின் படி குளியலின் சுன்னத்துக்கள் 10

1. பிஸ்மில்லாஹ் கூறிவிட்டுக் குளித்தல்
2. உடல் மற்றும் உடையில் படிந்த அருவருப்புகளைக் கழுவுதல். (ஷாபி மத்ஹபின்படி – விந்து, மூக்குச்சளி போல் அருவருப்பானது)
3. வாய் கொப்பளித்து விட்டு. நாசிக்கு நீர் செலுத்துதல்.

4. முதலில், தலை, பின் வலப்புறம், பிறகு இடப்புறம் என்று வரிசைக் கிரமமாகத் தண்ணீர் ஊற்றுதல்.
5. உரோமங்களைக் கோதிவிடுதல்
6. ஒவ்வொரு பகுதியின் மீதும் மும்முறை தண்ணீர் ஊற்றுதல்
7. உடலைத் தேய்த்துக் குளித்தல்
8. தொப்புள், அக்குள், கண்குழி, கை, கால், விரல்கள். ஆகியவற்றின் மூட்டுச் சுருக்கங்களைக் கவனித்துக் கழுவுதல்
9. கிப்லாவை முன்னோக்குதல்
10. ஒருறுப்பு உலருவதற்கு முன், இன்னொரு உறுப்பைத் தொடர்ச்சியாகக் கழுவுதல்

ஹனபி மத்ஹபின்படி, குளியலுக்கு அமைந்த 3 பர்ளுகளையும் 7 சுன்னத்துகளையும், ஷாபி மத்ஹபின் படி குளியலுக்கு அடைந்த 2 பர்ளுகளையும் 10 சுன்னத்துகளையும் ஒன்றாய் இணைத்து நோக்குகையில், புலப்படும் உண்மையாதெனில் 'உச்சிமுதல் உள்ளங்கால் வரை உடலில் புறப்பகுதியில் எதையுமே விட்டு வைக்காமல் அனைத்தையும் தண்ணீர் அடையும் வண்ணம் கழுவுதல், என்பது இரு மத்ஹபுகளிலும் இடம்பெற்ற இன்றியமையாத பர்ளாகும்.

ஹனபி மத்ஹபிலுள்ள முதலிரு பர்ளுகளான – வாய் கொப்பளித்தலும். நாசிக்கு நீர் செலுத்துதலும் – ஷாபி மத்ஹபில் சுன்னத்துக்களாக அமைந்துள்ளன. இவ்வாறே ஷாபி மத்ஹபிலுள்ள முதல் பர்ளான– 'குளியலின் போது, 'ஜனாபத்'தை அகற்றுவதாக நிய்யத் செய்தல்' என்பது ஹனபி மத்ஹபில் சுன்னத்தாக அமைந்துள்ளது.

குளியலைத் தொடங்குவதற்கு முன், ஒலுச் செய்துவிட்டு, மர்மஉறுப்பைக் கழுவிய பின் குளித்தால், அந்தக் குளியலின் மூலம் ஹனபி மத்ஹபின் அடிப்படையில் தொழுகையை நிறைவேற்றலாம். மேலும் ஜனாபத்தினால் விலக்கப்பட்டிருந்த செயல்களையும் செய்யலாம். ஆனால் – ஷாபி மத்ஹபின் அடிப்படையில் – ஒலுச் செய்து விட்டு மர்மவுறுப்பைக் கழுவிய பின் குளித்தால் – அந்தக் குளியலின் மூலம் தொழுகையை நிறைவேற்றவியலாது. ஏனென்றால், ஒலுச்செய்த பின் மர்மவுறுப்பைத் தொட்டால் – ஷாபி மத்ஹபின் படி – ஒலு முறிந்து விடும். எனவே மர்மவுறுப்பைக் கழுவிய பின், மீண்டுமொரு முறை ஒலுச் செய்தால் தான், அந்த ஒலுவைத் தொடர்ந்த குளியலுக்குப்பின் ஷாபி மத்ஹபின் படி தொழுகையை நிறைவேற்றவியலும். எனவே ஷாபி மத்ஹபைச் சார்ந்தவர்கள், மர்மவுறுப்பைக் கழுவிய பின்னரே ஒலுச் செய்ய வேண்டும். ஹனபி மத்ஹபைச் சார்ந்தவர்கள் மர்மவுறுப்பைக் கழுவுவதற்கு முன்னரோ, பின்னரோ ஒலுச் செய்யலாம்.

ஜனாபத்தின் கடமையான குளியலையும், – ஜும்ஆவின், அல்லது பெருநாளின், அல்லது ஹஜ் உம்ராவுடைய இஹ்ராமின் – சுன்னத்தான குளியலையும் ஒரு சேர நிய்யத் செய்து விட்டு, ஒருவர் குளித்தால், அவருக்கு இரண்டுமே நிறைவேறிவிட்டன. ஆனால் பர்ளுக்கும், சுன்னத்திற்கும் தனித்தனியான குளியலே மிகச் சிறப்பாகும்.

ஜனாபத்திற்கான கடமையான குளியலை நிறைவேற்றுபவர்- அந்தக் குளியலுடன் ஒளுவை நிய்யத் செய்யாமலிருந்தாலும் கூட - அந்தக் குளியலுக்குள் ஒளுவும் உள்ளடங்கி விடுகிறது. எனவே. ஹனபி – ஷாபி ஆகிய இரு மத்ஹபுகளின் அடிப்படையிலும், ஜனாபத்

குளியலை நிறைவேற்றியவர், தனியாக ஒளுச் செய்யாமலேயே தொழுது கொள்ளலாம். பிற அமல்களையும் செய்யலாம். ஆனால் ஷாஃபி மத்ஹபைச் சார்ந்தவர் 'கடமையான குளியல்' என்ற நிய்யத்தைச் செய்தவராகவும், குளியலின் முடிவில் தன் மர்ம உறுப்பைத் தொடாதவராகவும் அமைந்திருக்க வேண்டும்.

## குளியல் கடமையானவர்கள் நடந்து கொள்ள வேண்டிய முறைகள்

குளியல் கடமையானவர்கள், அடுத்த நேரத் தொழுகையை 'கழா' ஆவதற்கு முன்னர் குளித்தாக வேண்டும். இல்லையெனில் தொழுகையை 'கழா' வாக்கிவிட்ட குற்றத்திற்குரியவர் ஆவார். உதாரணமாக இரவு பத்து மணியளவில் ஒருவர், 'ஜனாபத்' நிலையடந்து குளியல் கடமையாகி விட்டால் அவர் மறுநாள் காலையில் சூரியன் உதிப்பதற்கு முன், ஃபஜ்ரு தொழுகையைக் கழாவாகாமல் நிறைவேற்றுவதற்கு வசதியாக – சூரிய உதயத்திற்கு 10 நிமிடத்திற்கு முன்னரே குளித்து முடித்துவிட வேண்டும்.

"நபி (ஸல்) அவர்கள் ஜனாபத்தை அடைவார்கள். பின்னர் தூங்குவார்கள். பிறகு விழிப்பார்கள். பின் தூங்குவார்கள்" என்று, நபிகளாரின் துணைவியார் உம்முஸல்மா (ரலி) அவர்கள் அறிவிக்கும் ஹதீஸின் மூலம், (தகவல்:முஸ்னத் அஹ்மது) 'ஜனாபத்துடன் இரவு முழுவதும் தூங்கலாம்' என்ற அனுமதி வழங்கப்பட்டாலும், நபி (ஸல்) அவர்கள் ஜனாபத் ஏற்பட்டவுடன் ஒலு செய்துவிட்டுத்தான் தூங்கும் வழக்கமுடையவராக இருந்தார்கள் என்று வேறு சில ஹதீஸ்கள் எடுத்துரைக்கின்றன.

அண்ணலாரின் அருமைத் துணைவி அன்னை ஆயிஷா

(ரலி) அறிவிக்கிறார்கள். "நபி (ஸல்) அவர்களுக்கு ஜனாபத் ஏற்பட்டால் அதற்குப் பின் அவர்கள் உண்ணவோ– உறங்கவோ நாடினால் ஒலு செய்வார்கள். (தகவல் :புகாரி– முஸ்லிம்).

ஹஜ்ரத் உமர் இப்னு கத்தாப் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, தனக்கு இரவில் ஜனாபத் ஏற்படுவதாக முறையிட்டபோது நபியவர்கள் பதிலளிக்கையில், 'உமரே! நீவிர் உமது உறுப்பைக் கழுவி விட்டு, ஒலுச் செய்த பின் தூங்குக!'என்றார்கள். (அறிவிப்பாளர்:இப்னு உமர் (ரலி) தகவல்: புகாரி, முஸ்லிம்)

இந்த ஹதீஸ்களின் மூலம், ஜனாபத்துடனே தூங்கிவிட்டுப் பின்னர் துயிலெழுந்து குளிக்க அனுமதி வழங்கப்பட்டாலும், ஜனாபத் ஏற்பட்டவுடன் மர்மவுறுப்பைக் கழுவி விட்டு, ஒலுச் செய்த பின்னரே தூங்க வேண்டும் என்ற தகவல் தெரியவருகிறது.

ஜனாபத்திற்குப்பின் ஒலுச்செய்யாமலேயே அப்படியே தூங்கி விட்டால் அது விரும்பத்தக்கதல்ல. ஏனெனில் நபி மணி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

"உருவப்படம், நாய், (ஒலுக்கூடச் செய்யாமலிருக்கும்) ஜனாபத்துடையவன் ஆகியோர் இருக்கும் வீட்டில் (அருளின்) மலக்குகள் புகமாட்டார்கள்."

*(அறிவிப்பாளர்:ஹஜ்ரத் அலி (ரலி), தகவல்:அபூதாவூது–நஸயீ)*

மேலும் மாநபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். "காபிரின் பிணம், குங்குமச் சாயத்தை மேனியில் பூசிய ஆடவன், ஒலு செய்யாதிருக்கும் ஜனாபத் உடையவன் (முழுக்காளி) ஆகிய மூவரிருக்கும் இடத்தை மலக்குகள் நெருங்கமாட்டார்கள்".

*(அறிவிப்பாளர்:அம்மார் இப்னு யாஸிர் (ரலி), தகவல்:அபூதாவூது)*

ஜனாபத் ஏற்பட்ட பின், உண்ணுவதற்கும், உறங்குவதற்கும் முன் ஒலுச்செய்வது சுன்னத்தாக இருப்பது போன்று, ஒரு முறை செய்த உடலுறவினால் ஜனபாத் ஏற்பட்ட பிறகு மீண்டுமொருமுறை உடலுறவு செய்ய விரும்புவோர், ஒலுச் செய்து கொள்வது 'சுன்னத்' ஆகும். ஏனெனில், நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

"உங்களில் எவரேனும் தன் மனைவியிடம் உடலுறவு கொண்டுவிட்டு, மீண்டுமொருமுறை உடலுறவு கொள்ள நாடினால், அவ்விரண்டிற்கும் மத்தியில் அவர் ஒலு செய்து கொள்ளட்டும்"

*(அறிவிப்பாளர்:அபூஸயீதுல் குத்ரீ (ரலி)*
*தகவல்: ஸஹீஹ் முஸ்லிம்)*

'ஜனாபத் ஏற்பட்டதினால் குளியல் கடமையானவரை, ஜனபாத் ஏற்படாத சுத்த நிலையிருப்பவர் தொடுவதிலோ, கைகொடுப்பதிலோ, ஆரத்தழுவுவதிலோ ஆட்சேபனையில்லை. ஏனெனில் ஹஜ்ரத் அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியுள்ளார்கள்.

"நான் குளியல் கடமையான (ஜனாபத்) நிலையில், மதீனாவின் ஒரு தெருவில் நின்று கொண்டிருந்த போது, நபி (ஸல்) அவர்கள் என்னைச் சந்தித்தார்கள். அப்போது நான் நழுவிவிட்டேன். பின்னர் குளித்துவிட்டு அவர்களிடம் வந்தேன் அப்போது நபி (ஸல்) அவர்கள் என்னை நோக்கி, "அபூஹுரைரா எங்கு நழுவி விட்டீர்?" என்று கேட்டார்கள். அதற்கு நான் "குளியல் கடமையாகியிருந்தேன். எனவே நான் சுத்தமில்லாமல் தங்களின் அருகே அமர்வதை வெறுத்தேன்" என்றேன். அப்போது நபி (ஸல்) அவர்கள் (வியப்புற்று)"சுப்ஹானல்லாஹ்!நிச்சயமாக ஒரு முஸ்லிம் அசுத்தமாக மாட்டான்!" என்றார்கள். (தகவல்:ஸஹீஹுல் புகாரி)

புகாரி ஷரீபின் இன்னொரு ஹதீஸில், அபூஹுரைரா (ரலி) ஜனாபத்தாக இருந்த நிலையில், அவரை சந்திக்க நேரிட்ட நபி (ஸல்) அவர்கள், அபூஹுரைராவின் கையினைப் பிடித்தார்கள் என்றும் அண்ணலாரோடு சிறிது தூரம் அபூஹுரைரா நடந்து சென்றார்கள் என்றும் வந்தள்ளது.

கணவனும் மனைவியும் உடலுறவு கொண்டபின், முதலில் குளியலை முடித்து சுத்தமான கணவன், குளியலை முடிக்காத 'ஜனாபத்' நிலையிலுள்ள–மனைவியைக் கட்டியணைப்பதில் தவறில்லை. ஏனெனில் ஜனாபத் ஏற்பட்ட பின், குளித்து சுத்தமான நபி (ஸல்) அவர்கள், அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்களை – அம்மையார் குளிப்பதற்கு முன் கட்டியணைத்து சூடுபிடித்துக் கொண்டதாக ஆயிஷா நாயகியே அறிவிக்கிறார்கள்.

*(தகவல்:இப்னுமாஜா)*

குளியல் கடமையான (ஜனாபத்உடைய) வர்கள், தொழுகையை நிறைவேற்றத் தடையிருப்பது போல், நோன்பு வைப்பதற்குத் தடையில்லை.

**"நோன்புகால இரவுகளில், உங்களின் மனைவியரிடம் உடலுறவு கொள்வது– உங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளது. (ஏனெனில்) அவர்கள் உங்களுக்கு ஆடையாகவும், நீங்கள் அவர்களுக்கு ஆடையாகவுமிருக்கிறீர்கள்.**

*(அல்குர்ஆன் 2:187)*

என்ற வேத வசனத்திற்கேற்ப 'புனித ரமளான் இரவில், தன் மனைவியிடம் உடலுறவு கொண்ட ஒருவர்– ஸஹர் உணவருந்தியோ அல்லது உணவருந்தாமலோ – குளிக்காமலேயே தூங்கிவிட்டார்'

என்று வைத்துக் கொள்வோம். அவர் காலையில் ஆறு மணிக்கோ ஏழுமணிக்கோ எழுந்து விட்டாரெனில், அவர் அப்போதே அன்றைய தின நோன்பை நிய்யத் செய்து விட்டு, அந்நாளில் நோன்பிருக்கலாம். பகல் பன்னிரண்டு மணிக்குள், அவர் எப்போது கண்விழித்தாலும்—நோன்பை முறிக்கும் செயல்கள் (உண்ணுதல் பருகுதல் போன்றவை) அந்தப் பகற்பொழுதில் அவரிடமிருந்து நிகழவில்லையென்றால் —அன்றைய தின நோன்பை அவர் நிய்யத்துச் செய்துவிட்டு நோற்கலாம். முந்தைய இரவிலேயே நிய்யத்துச் செய்துவிட்டால், பகலில் தனியாக மீண்டும் நோன்புக்கு நிய்யத் செய்ய வேண்டிய அவசியமில்லை. நோன்பாகவே அந்த நாளைக் கழிக்கலாம். ஆனால் ஷாபி மத்ஹபைச் சார்ந்தவர்கள் சுப்ஹுக்கு முன்னரே நோன்பிற்குரிய நிய்யத்தை வைத்தால்தான். ஜனாபத் நிலையிலும் அந்த நாளின் நோன்பைத் தொடரவியலும்.

இத்தகைய கட்டங்களில் சுப்ஹுத் தொழுகையைக் கழாவாக்கிவிட்ட குற்றம் கண்டனத்திற்குரியதுதான். ஆனால் நம்மையும் மீறி தூக்கம் மிகைத்துவிட்டால், அந்நேரம் சுப்ஹுத் தொழுகைக்கு எழுப்புவோர் எவருமில்லாமல் இடைவிழிப்பும் ஏற்படாதிருந்தால் சுப்ஹுத் தொழுகை கழாவாகிய சூழல் கண்டனத்திற்குரியதல்ல.

நோன்பு வைத்திருக்கும் போது, சுப்ஹுக்குப்பின் மக்ரிபுக்கு முன் தூக்கத்தில் கலிதம் ஏற்பட்டாலும் ஒரு பெண்ணைப் பார்த்ததாலோ அல்லது அவளைப் பாராமலேயே அவளுடன் உடலுறவு கொள்வதாகக் கற்பனை செய்ததாலோ விந்து வெளியேறினாலும் நோன்பு முறிந்து விடாது. கையினால் விந்தை வெளியேற்றினால் நோன்பு முறியும்.

இவ்வாறே சுப்ஹுடைய நேரம் வரவில்லையென்று நினைத்துக் கொண்டு, மனைவியுடன் உடலுறவு கொண்டாலும் அல்லது நோன்பு வைத்திருப்பதையே மறந்து கொண்டு உடலுறவு கொண்டாலும் நோன்பு முறியாது.

## மாதரைத் தீண்டும் மாதவிலக்கு!

குளியலைக் கடமையாக்கும் 4-வது காரணம், மாதவிலக்கு (MENSUS) ஆகும். இந்தக் காரணம், பெண்களுக்கு மட்டுமே உரியதாகும். மனித இனத்தைத் தமது மணிவயிற்றில் தாங்கி, இந்த மண்ணுலகிற்குத் தருகின்ற தாய்மைப்பேறு – பெண்ணினத்திற்கு இறைவன் தந்த தனிச்சிறப்பாகும். எனவே ஆடவருக்கில்லாத அதிக உறுப்புகளில் ஒன்றாகக் கருவறையைப் பெண்களுக்கு இறைவன் அமைத்திருக்கிறான். இந்தக் கருவறைதான், பெண்களுக்கு மட்டும் கட்டாயக் குளியல்களின் கட்டங்களை மாத விலக்கு என்றும் பிள்ளைப்பேறு உதிரம் என்றும் அதிகப்படுத்தக் காரணமாகும்.

பருவமடைந்த பெண்ணின் கருப்பை மேற்புறத்தில் இரு பக்கங்களிலும் முட்டை வடிவிலிருக்கும் அண்ட உறுப்புகள் வளர்ச்சியடைகின்றன. இவ்விரு அண்ட உறுப்புகளும் தனித்தனி கருக்குழாய் மூலம் கருப்பையுடன் தொடர்பு கொள்கின்றன. மாதந்தோறும் இந்த அண்ட உறுப்புகளில் கரு முட்டைகள் உற்பத்தியாகின்றன. இந்த கருமுட்டைகளைக் கருக்குழாய் இழுத்துவந்து ஒருவகைத் திரவத்துடன் கலந்து கருப்பைக்குள் அனுப்பி வைக்கிறது. கருப்பைக்குள் புகுந்த இந்தக் கருமுட்டைகள் 48 மணி நேரம்தான் உயிருடன் இருக்கும்.

இந்தக் கால அளவிற்குள் ஆணின் விந்து உடலுறவு மூலம் கருப்பைக்குள் புகுந்தால் – அது கருமுட்டைக்குள் நுழைந்து பெண்ணைக் கருத்தரிக்கச் செய்கிறது. இவ்வாறு புகவில்லையென்றால் கருப்பைக்குள் இருக்கும் கருமுட்டைகள் தமது ஆற்றலை இழந்து இறந்து விடுகின்றன. இறந்துவிட்ட கருமுட்டைகளும் கருக்குழாய்களிலிருந்து கருப்பையை நோக்கி வடிந்த திரவமும் சேர்ந்து கழிவுப்பொருளாக மாறி பெண்ணுறுப்பு வழியே இரத்தத்தின் வடிவில் மாதந்தோறும் வெளியேறுகின்றன. இதைத் தான் மாதவிடாய் அல்லது மாதவிலக்கு (MENSUS) என்கிறோம். இவ்வாறு வெளியேறும் காலத்தை மாதவிலக்குக் காலம் என்கிறோம்.

பெண்களுக்கு ஏற்படும் **ஹைழு** எனும் இத்தகைய மாதவிலக்கு குறைந்த பட்சம் 9–ஆவது வயதில் ஏற்படும். இவ்வாறு ஏற்படுவது அதிகபட்சமாக 50 அல்லது 55 வயதுவரை நீடிக்கலாம். நாட்டின் தட்ப வெப்ப நிலைகளுக்குக்கேற்ப ஹைழுடைய தொடக்க வயதும் முடிவு வயதும் வேறுபடலாம். நமது நாட்டைப் பொறுத்தவரை பெரும் பாலும் பெண்களுக்கு 13 அல்லது 14ஆம் வயதில் தான் ஹைழு ஏற்படத் தொடங்குகிறது 50–ஆவது வயதிற்குள் முடிவடைகிறது.

மாதந்தோறும் ஹைழின் உதிரம் கசியத் தொடங்கினால் குறைந்த பட்சம் மூன்று நாட்கள் வரை நீடிக்கும் என்றும் அதிகபட்சமாக 10 நாட்கள் வரை நீடிக்கும் என்றும் ஹனபி மத்ஹபின் சட்ட நூல்கள் கூறுகின்றன. குறைந்த பட்சம் ஒரு இரவும் ஒரு பகலும் (24 மணிநேரம்) என்றும் அதிகபட்சம் 15 நாட்கள் என்றும் ஷாபி மத்ஹபின் சட்ட நூல்கள் கூறுகின்றன. எனவே, இங்கு கூறப்பட்ட குறைந்துபட்ச கால அளவுக்கு முந்தியோ அல்லது அதிகபட்ச கால

அளவுக்குப் பிந்தியோ கசிகின்ற இரத்தம் ஹைழு ஆகாது. இது மருத்துவ சிகிச்சை பெறவேண்டிய உதிரப்போக்கு நிலையாகும்.

பெண்கள் கருத்தரித்தால் அவர்களுக்கு மாதவிலக்கு இரத்தம் வருவது நின்று விடும். இது தான், இயல்பான நிலையாகும். அந்த இயல்புக்கு மாற்றமாக, யாராவது ஒரு பெண் கருத்தரித்த பின் பிள்ளையைப் பெறுவதற்குப் பல நாட்களுக்கு முன் உதிரம் வெளியேறக் கண்டாலும் அல்லது பிள்ளையைப் பெறுவதற்கு இரண்டோ மூன்றோ நாட்களுக்கு முன் வலியில்லாமல் உதிரம் வெளியேறக் கண்டாலும் அந்த உதிரம் அவளுடைய மாதவிலக்கின் வழக்கமான அளவுப்படி முறைப்படி இருந்தால் – அது ஹைளு ஆகும் என்பது, ஷாபி மத்ஹபின் விதிமுறையாகும். இத்தகைய இரத்தம் ஹைளு அல்ல; உதிரப்போக்கு வகையைச் சார்ந்த கெட்ட இரத்தமாகும் என்பது ஹனபி மத்ஹபின் விதிமுறையாகும்.

மாதவிலக்கின் குறைந்த பட்ச அளவுக்கும் அதிபட்ச அளவுக்கும் மத்தியில் நடுநிலையாக சராசரிப் பெண்களுக்குப் பெரும்பாலும் ஆறு ஏழு நாட்கள் வரை மாதவிலக்கு வரலாம். ஒரு பெண்ணுக்கு மாதம் 3 நாட்கள் அல்லது 4 நாட்கள் அல்லது 5 நாட்கள் அல்லது 6 நாட்கள் மாதவிலக்கு வருவது வழக்கம் என்று வைத்துக் கொள்வோம். இத்தகைய பெண்ணுக்கு ஏதாவது ஒரு மாதத்தில் வழக்கத்திற்கு மாற்றமாக ஓரிரு நாட்கள் கூடுதலாகவோ அல்லது ஓரிரு நாட்கள் குறைவாகவோ இரத்தம் கசிந்து விட்டதென்றால் அந்தக் கூடிய அல்லது குறைந்த நாட்களும் மாதவிலக்கு இரத்தமாகவே கணிக்கப்படும்.

மாதவிலக்கு வந்த பெண்ணுக்குக் கசியத் தொடங்கிய

இரத்தம் மறுநாள் முற்றிலும் நின்று விட்டு அதற்கடுத்த நாள் மீண்டும் கசிந்தது என்று வைத்துக் கொண்டால் – இடையில் கசியாமலிருந்த நாளும் பொழுதும் அவளின் மாதவிலக்குக் காலமாகவே கருதப்படும். உதாரணமாக மாதத்தில் எட்டு நாட்கள் மாதவிலக்காக இருக்கும் வழக்கமுடைய பெண்ணுக்கு ஒரு நாள் விட்டு ஒரு நாள் மாதவிலக்கு இரத்தம் அறவே கசியாமல் இடையிலுள்ள நான்கு நாட்கள் மட்டும் இரத்தம் கசிவதானால், அவளுக்கு விடுபட்ட நான்கு நாட்களையும் சேர்த்து, மொத்தம் எட்டு நாட்களையும் மாத விலக்குக் காலமாகவே கணிக்கப்படும்.

மாதத்தில் ஒரு குறிப்பிட்ட தேதியில் வழக்கமாக மாதவிலக்கு வரும் ஒரு பெண்ணுக்கு – ஏதாவது ஒரு மாதத்தில் சில நாட்கள் முந்தியோ அல்லது பிந்தியோ இரத்தம் கசிந்தாலும் அந்த இரத்தத்தை மாதவிலக்காகவே கருதப்படும். உதாரணமாக பிரதிமாதம் 10–ம் தேதி மாதவிலக்கு வரும் வழக்கமுடைய ஒரு பெண்ணுக்கு ஒரு மாதத்தில் 5ம்தேதி இரத்தம் தென்பட்டாலோ அந்த இரத்தத்தை மாதவிலக்காகவே கணிக்கப்படும்.

மாதவிலக்கு நாட்களுக்கிடையே அல்லது மாதவிலக்கு நாட்களோடு முந்தியோ பிந்தியோ ஒட்டிய நாளில் – ஒரு பெண் தன்னுறுப்பிலிருந்து பழுப்பு நிறத்திலோ அல்லது மண்ணின் நிறத்திலோ திரவம் கசிந்திடக் கண்டால் அந்தத் திரவத்தை மாதவிலக்கு இரத்தமாகவே கருதப்படும். ஏனெனில் அன்னை ஆயிஷா (ரலி) அவர்களை நோக்கிச் சில பெண்கள், தமது உறுப்பில் மாதவிலக்கின் போது வைத்துக் கட்டிய பஞ்சு மஞ்சள் நிறமாக மாறியிருக்கும் நிலையில் தமக்கு மாதவிலக்கு இரத்தம் நின்றுவிட்டாதா? அல்லது நிற்கவில்லையா? என்று கேட்டார்கள்.

அதற்குப் பதிலளித்த நாயகியார், அப்பெண்களை நோக்கி மாதவிடாய் செல்லுமிடத்தில் வைக்கப்படும் பஞ்சு, வெள்ளை நிறமாக மாறும் வரை நீங்கள் அவசரப்பட்டு மாதவிலக்கிலிருந்து சுத்தமாகி விட்டதாகக் கருதிவிடாதீர்கள்–என்றார்கள்.

(*தகவல்: ஸஹீஹுல் புகாரீ*)

மாதவிலக்கின் நாட்களல்லாத சுத்தநாட்களில் கசியும் பழுப்பு நிறத்திரவத்தையோ மண்ணின் நிறத்திரவத்தையோ, மாதவிலக்காகக் கருதப்படமாட்டாது. ஏனெனில் சுத்த நாட்களில் இவ்வாறு கசியும் திரவத்தை நாயகத் தோழியர்கள் மாதவிலக்கு இரத்தமாகக் கருதியதில்லை என்று, உம்மு அதிய்யா (ரலி) என்ற நாயகத் தோழி கூறியதாக ஸஹீஹுல் புகாரி குறிப்பிடுகிறது.

மாதவிலக்கு நின்றுவிட்ட பின், அடுத்த முறை மாதவிலக்கு வருவதற்கிடைப்பட்ட சுத்த நாட்கள் குறைந்த பட்சம் 15 நாட்கள் ஆகும். இரண்டு மாதவிலக்கிற்கு இடைப்பட்ட சுத்த நாட்கள் 15 நாட்களை விடக் குறைந்தால் வெளியேறிய இரத்தம், மாதவிலக்காகக் கணக்கிடப்பட மாட்டாது. உதாரணமாக, ஜனவரி மாதம், முதல் தேதி ஒரு பெண்ணுக்கு மாதவிலக்கு ஏற்படத்தொடங்கி 5–ம் தேதி வரை தொடர்ந்து விட்டது என்று வைத்துக் கொள்வோம். அவ்வாறாயின் அவளுக்கு அடுத்த மாதவிலக்கு ஜனவரி 21–ம் தேதியோ அல்லது அதற்குப் பின்னரோ தான் ஏற்பட வேண்டும். 5–ம் தேதி முடிய மாத விலக்காக இருந்து, பின் சுத்தமாகிக் குளித்த பெண்ணுக்கு 20–ம் தேதியன்றே இரத்தம் கசிந்தால், கசிந்தது மாத விலக்கல்ல! உதிரப் போக்காகும்.

# மாதவிலக்கு பெண்கள் செய்யக் கூடாத கருமங்கள்

## 1. தொழுகையை நிறைவேற்றல்

மாதவிலக்குப் பெண்கள் தொழுவது ஹராமாகும். அவ்வாறு தொழுதால் அந்தத் தொழுகை செல்லுபடியாகாது. ஒரு பெண்ணுக்கு மாதவிலக்கு ஏற்பட்ட நேரம் – ஐவேளைத் தொழுகைகளில் ஏதாவது ஒரு வேளைக்குரிய தொழுகையின் நேரமாக இருந்தால், அந்த நேரத்தில் முழுமையாக ஒரு ரக்அத் மட்டும் தொழுவதற்குப் போதிய அளவு கால அவகாசம் கிடைத்தாலும் அந்த வக்தின் தொழுகையைத் தொழுவது அவளுக்குக் கடமையாகும். முழுமையாக ஒரு ரக்அத் தொழுவதற்குக் கூடப் போதிய அளவு கால அவகாசம் கிடைக்கவில்லையென்றால், அந்த வக்துத் தொழுகையை நிறைவேற்றுவது அப்பெண்ணுக்குக் கடமையல்ல.

உதாரணமாக மாலை மணி 6.15க்கு சூரியன் மறைந்து விட்டதென்று வைத்துக் கொள்வோம். அவ்வாறாயின், அன்று 6.14ல் அல்லது 6.15ல் அல்லது 6.16ல் மாத விலக்கு ஏற்பட்ட பெண்ணுக்கு அன்றைய மக்ரிபு தொழுகை கடமையில்லை. ஆனால் 6.17ல் மாதவிலக்கு ஏற்பட்டால் அப்பெண்ணுக்கு அன்றைய மக்ரிப் தொழுகை கடமையாகி விட்டதால் சுத்தமான பின் மக்ரிபை மட்டும் அவள் கழா செய்ய வேண்டும். ஏனென்றால் 6.15ல் சூரியன் மறைந்தவுடன் மக்ரிபின் நேரம் வந்து விட்டது. உடனே தொழத் தொடங்கினால் 6.16க்குள் தொழுகையில் ஒரு ரக்கஅத்தை முழுமையாக நிறைவேற்றி விடவாய்ப்பில்லை. ஆனால், 6.17க்குள் அந்த வாய்ப்பு கிடைத்து விடுகிறதல்லவா!

இவ்வாறே காலையில் 6.15க்கு சூரியன் உதித்து விட்டதென வைத்துக் கொள்வோம். அவ்வாறாயின், அன்று 6.14–ல் அல்லது 6.15–ல் அல்லது 6.16–ல் மாதவிலக்கிலிருந்து சுத்தமான பெண்ணுக்கு அன்றைய பஜ்ரு (சுப்ஹு) தொழுகை கடமையில்லை. ஆனால் 6.13ல் மாதவிலக்கிலிருந்து சுத்தமானால், அப்பெண்ணுக்கு அன்றைய பஜ்ருத் தொழுகை கடமையாகிவிட்டதால் பஜ்ரை மட்டும் அவள் கழா செய்ய வேண்டும். ஏனென்றால் 6.15ல் சூரியன் உதிப்பதற்குமுன் அவள் சுத்தமான 6.13 என்பது பஜ்ரின் நேரமல்லவா! அந்த நேரத்தில் உடனடியாகத் தொழத் தொடங்கினால் 6.15க்குள் ஒரு ரக்அத்தை உதயத்திற்குள் முழுமையாக நிறைவேற்றிட வாய்ப்பிருக்கிறதல்லவா!

இவ்வாறே ஐந்து நேரத் தொழுகைகளின் நிலைகளையும் கணிக்கலாம். சூரியன் உதிக்கும் நேரம் மாதவிலக்கு நிலையடைந்த பெண் 3க்கும் – 10க்கும் இடைப்பட்ட நாட்களுக்குப் பின் அல்லது ஷாபி மத்ஹபின் படி 1–க்கும் 15–க்கும் இடைப்பட்ட எந்த நாளின் எந்தத் தொழுகையையும் கழா செய்ய வேண்டிய தேவையில்லை.

## 2. குர்ஆனை ஓதுவதும் தொடுவதும்:-

மாதவிலக்கு வந்தவுடன் சுத்தமாகும் வரை குர்ஆனை ஓதுவதும் குர்ஆனைத் தொடுவதும் ஹராமாகும். ஆனால் விரித்து வைக்கப்பட்ட குர்ஆனையோ அல்லது வீடியோ கேஸட்களிலோ, கம்ப்யூட்டர் சி.டி களியோ பதிவு செய்யப்பட்டு டி.வி. அல்லது கம்ப்யூட்டர் திரைகளில் ஒட விடப்படும் திருமறை வசனங்களையோ உதட்டால் உச்சரிக்காமல் உள்ளத்தால் (உச்சரித்து) ஓதிவருவதில் தவறில்லை.

அன்றாட செயல்களுக்கு முந்திய அல்லது பிந்திய திக்ர்களாக அவ்ராதுகளாக வரும் வசனங்களை ஓதுவதில் தவறில்லை. உதாரணமாக உண்ணுதல், பருகுதல், உறங்குதல் போன்ற செயல்களுக்கு முன்னர், பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் என்றோ, இச்செயல்களுக்குப் பின்னர் அல்ஹம்து லில்லாஹி என்றோ வாகனம் புறப்படும் போது ஸுப்ஹனல்லதீ திருவசனத்தையோ, துயரச் செய்தியைக் கேள்விப்பட்டவுடன் இன்னாலில்லாஹி வஇன்னா இலைஹி ராஜிஊன் என்ற திருவசனத்தையோ குர்ஆன் ஓதுதல் என்ற எண்ணமில்லாமல் குறிப்பிட்ட நேர திக்ர் என்ற எண்ணத்தில் ஓதலாம்.

குர்ஆன் பயிற்றுவிக்கும் ஆசிரியைகளாக இருக்கும் பெண்களும், குர்ஆன் பாடத்தைத் தேர்வு நடத்தும் ஆசிரியைகளிடம் பாடம் ஒப்புவிக்கும் மாணவிகளாக இருக்கும் பெண்களும் தமது மாதவிலக்கு நாட்களில் குர்ஆன் வசனங்களை ஒவ்வொரு சொல்லாக நிறுத்தி நிறுத்திப் பயிற்றுவிப்பதிலும், ஒப்புவிப்பதிலும் தவறில்லையென்று மார்க்கச் சட்டத்துறைவல்லுனர்கள் விதிவிலக்கு வழங்கியுள்ளனர்.

### 3. நோன்பு வைத்தல்:-

மாதவிலக்கு நாட்களில் பர்ளான கடமையான நோன்புகளையோ, நஃபிலான – சுன்னத்தான – நோன்புகளையோ வைப்பது ஹராமாகும். அவ்வாறு வைத்தாலும் அந்த நோன்பு செல்லுபடியாகாது, இந்நாட்களில் தொழுகை ஹராம் என்பதற்கும், நோன்பு ஹராம் என்பதற்கும் இடையிலுள்ள வேறுபாடு யாதெனில், தொழுகையை சுத்தநாட்களில் கழா செய்ய வேண்டிய

தேவையில்லை. ஆனால் நோன்பை அது பர்ளாக இருந்தால் சுத்த நாட்களில் கழா செய்தாக வேண்டும்.

ஒரு பெண் நோன்பு வைத்திருக்கும் நிலையில், அவளுக்கு மாதவிலக்கு ஏற்பட்டால் அவளின் நோன்பு முறிந்துவிடும். மக்ரிபுக்கு ஒரு நிமிடம் முன்னராயினும் கூட அவளின் நோன்பு முறிந்து விடும். எனவே அவள் வைத்தது, பர்ளு நோன்பாக இருந்தால் அந்த நோன்பை அவள் கழா செய்தாக வேண்டும்.

பஜ்ருடைய நேரம் வந்துவிட்ட போது மாதவிலக்காக இருந்த ஒரு பெண் பஜ்ருக்கு ஒரு நிமிடத்திற்குப் பிறகு சுத்தமானாலும் கூட அவளின் அந்தநாள் நோன்பு செல்லுபடியாகாது.

பஜ்ருக்கு ஒரு நிமிடத்திற்கு முன் மாதவிலக்கிலிருந்து சுத்தமாகிவிட்ட ஒரு பெண், உடனடியாகக் குளிக்காமல் பஜ்ருக்குப்பின் குளித்தாலும் சரியாகும். ஏனெனில் நபிகளார் (ஸல்) அவர்கள், உடலுறவினால் ஜனாபத் நிலையடைந்தவராக இருக்கவே (நோன்பு நாளில்) ஸுப்ஹு நேரத்தையடைந்தார்கள் அவ்வாறே நோன்பையும் தொடர்ந்தார்கள் (தகவல் புகாரி, முஸ்லிம்) என்று ஆயிஷா (ரலி) அறிவித்துள்ளார்கள். (சுப்ஹு நேரம் வந்தவுடன், நபியவர்கள் தொழுகைக்காக உடனடியாகக் குளித்து விட்டார்கள் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.)

இந்த ஹதீஸிலிருந்து ஜனாபத் குளியல் கடமையாக இருக்கும் நிலையிலேயே நோன்பைத் தொடங்குவதில் தவறில்லை எனத் தெரிய வருகிறதல்லவா! இந்தச் சட்டமே, மாதவிலக்குக் குளியல் கடமையாக இருக்கும் நிலைக்கும் உரியது என்று மார்க்கச் சட்டமேதைகள் கூறியுள்ளனர். ஆனால் நோன்பைத் தொடங்கும்

போது, மாதவிலக்கு இரத்தக் கசிவின்றி முற்றிலும் சுத்தமானவளாக பெண்ணிருக்க வேண்டுமென்பது முக்கிய நிபந்தனையாகும்.

## 4. கஃபாவை தவாஃப் செய்தல்:-

மாதவிலக்கின் போது கஃபாவைத் தவாஃப் செய்வது ஹராமாகும். அந்தத் தவாஃப், பர்ளான ஹஜ்ஜுடைய, அல்லது சுன்னத்தான உம்ராவுடைய, தவாஃபாக இருப்பினும் அல்லது ஹஜ் – உம்ராவுடன் இணையாமல் தனியாகச் செய்யும் தவாஃபாக இருப்பினும் ஹராமாகும். அண்ணலாருடன் ஹஜ்ஜுக்குச் சென்ற ஆயிஷா நாயகிக்கு மாதவிலக்கு வந்த போது நபியவர்கள் அம்மையாரை நோக்கி, "ஹாஜிகள் செய்வதை(யெல்லாம்) நீ செய்யலாம். ஆனால் நீ சுத்தமாகும் வரை கஃபாவை தவாஃப் செய்யாதே!" என்றார்கள்.

எனவே மாதவிலக்குப் பெண்கள் ஸஃபா – மர்வா தொங்கோட்டம் ஓடுவதிலோ அரஃபாவில் தங்குவதிலோ, முஸ்தலிபாவில் இரவைக் கழிப்பதிலோ, மினாவில் மூன்று நாட்கள் தங்கி ஷைத்தானைக் கல்லெறிவதிலோ தவறில்லை. எனினும் ஸஃபாமர்வா தொங்கோட்டம், மாதவிலக்கின்போது ஹராமில்லையென்றாலும் மக்றூஹ் (விரும்பத்தகாதது) ஆகும்.

எனவே, ஹஜ்ஜுக்கு இஹ்ராம் கட்டிய பெண், கடமையான இஃபாழாவுடைய தவாஃபிலிருந்து ஏழாவது தவாஃபை நிறைவுசெய்வதற்கு முன்னர் – ஏழாவது தவாஃபின் தொடக்கத்திலோ. அல்லது ஆறாவதோ ஐந்தாவதோ தவாஃபின் கட்டத்திலோ மாதவிலக்கு நிலைபடைந்தால், உடனே அந்தப் பெண் தவாஃபை நிறுத்திவிட்டு. மஸ்ஜிதுல் ஹராமை விட்டு

வெளியேறியாக வேண்டும். பின் மாதவிலக்கிலிருந்து சுத்தமாகும் வரை காத்திருந்து, சுத்தமான பின் – கடமையான இந்தத் தவாஃபை நிறைவேற்ற வேண்டும்.

மாதவிலக்கான பெண்கள், மக்காவிலிருந்து விடைபெறும் தவாஃபான – **தவாஃபுல் விதா** செய்ய வேண்டிய அவசியமில்லை ஏனெனில் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

(ஹஜ்ஜு – உம்ரா நிறைவேற்றும்) மனிதர்களின் ஒப்பந்த முடிவு, கஃபாவுடன் அமைந்திருக்க வேண்டுமென மனிதர்கள் ஏவப்பட்டுள்ளனர். எனினும் மாதவிலக்கான பெண்ணுக்கு இந்த விதியிலிருந்து சலுகை வழங்கப்பட்டுள்ளது என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாக புகாரி – முஸ்லிம் ஆகிய இரு ஹதீஸுப் பெருநூல்களும் அறிவிக்கின்றன.

ஹஜ் உம்ராவுக்கு இஹ்ராம் கட்டிய பெண்ணுக்கு ஹஜ் உம்ராவுடைய தவாஃப நிறைவேற்றுவதற்கு முன் மாதவிலக்கு ஏற்பட்டு விட்டால் – மாதவிலக்கிலிருந்து சுத்தமாகும் வரை காத்திருந்து – சுத்தமான பின், இந்தத் தவாஃபை நிறைவேற்ற வேண்டும்.

### 5. பள்ளியினுள் தங்குவது:-

மாதவிலக்கு வந்த பெண்கள்; பள்ளியினுள் தங்குவது ஹராமாகும். இவ்வாறே பெருநாள் தொழுகை நடைபெறும் நேரத்தில் அந்தத் தொழுகை நடைபெறும் ஈத்காவில் அமர்வதும் ஹராமாகும். ஏனெனில், பெருநாள், தொழுகை நடைபெறும் இடத்திற்குச் செல்லும் மாதவிடாய்ப் பெண்கள் தொழுகை இடத்தை விட்டு –

ஒதுங்கியிருப்பார்கள். என்று நபி மணி (ஸல்) அவர்கள் கூறியதாக உம்மு அதிய்யா (ரலி) அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

*தகவல்: புகாரி, முஸ்லிம் அறிவிப்பாளர்: ஹப்ஸா (ரலி*

## 6. உடலுறவு கொள்வது:

"(நபியே!) மாதவிலக்கு குறித்து உம்மிடம் அவர்கள் கேட்கிறார்கள். அது இடையூறு என்பதால் மாதவிலக்கு நாளில் பெண்களை விட்டு (உடலுறவு செய்யாமல்) ஒதுங்கியிருங்கள். அவர்கள் சுத்தமாகும் வரை அவர்களுடன் (உடலுறவுக்கு) நெருங்காதீர்கள். என்று கூறுவீராக! (குர்ஆன் 2: 222) என்ற திருவசனம், மாதவிலக்கு மங்கையருடன் உடலுறவு கொள்வது, அவளின் கணவனுக்கு ஹராமாகும் என்றும், இவ்வாறே உடலுறவுக்கு முற்படுகின்ற கணவனுக்கு இணங்குவதும் மாதவிலக்குப் பெண்ணுக்கு ஹராமாகும். என்றும் அறிவிக்கிறது.

மாதவிலக்குப் பெண்ணுடன் உடலுறவைத் தவிர அனைத்தையும் செய்யுங்கள்! என்று நபி மணி (ஸல்) அவர்கள் அனுமதியளித்துள்ளார்கள். (அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் (ரலி) தகவல்: முஸ்லிம்) எனவே, மாதவிலக்குப் பெண்ணைக் கட்டியணைப்பதும், முத்தமிடுவதும், அவளின் கணவனுக்கு ஆகுமாகும். இது குறித்து ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கும் போது "நான் மாதவிலக்காக இருக்கும் நிலையில், நபியவர்கள் என்னை நோக்கி உன் ஆடையின் முடிச்சை இறுக்கமாகக் கட்டிக் கொள்! என்று கூறி என்னைக் கட்டிணைத்தார்கள்" என்று குறிப்பிட்டுள்ளார்கள்.

*(தகவல்: புகாரி, முஸ்லிம்)*

மாதவிலக்கு மங்கையருடன் ஒரே போர்வையில் துயில்வதிலும் தவறில்லை. அன்னை உம்முஸல்மா (ரலி) அறிவிக்கிறார்கள். "நான் நபிகளார் (ஸல்) அவர்களுடன் ஒரே துப்பட்டியில் படுத்துக் கொண்டிருந்த போது எனக்கு மாதவிலக்கு வந்துவிட்டது. உடனே நான் எழுந்து சென்று என் விலக்கு ஆடையை அணிந்து கொண்டேன். உடனே நபியவர்கள் என்னிடம் உனக்கு மாதவிலக்கு வந்து விட்டதா? என்றார்கள். நான் ஆம்! என்றேன். அப்போது நபியவர்கள் என்னைத் தன்னருகே அழைத்துக் கொண்டார்கள். பிறகு நான் நபியவர்களுடன் மீண்டும் அந்த ஒரே துப்பட்டியில் படுத்துக் கொண்டேன்."

இவ்வாறு அன்னை உம்முஸல்மா (ரலி) அவர்கள் கூறியதாக ஸஹீஹுல் புகாரி குறிப்பிடுவதிலிருந்து, மாதவிலக்கு வந்த பெண்ணுடன் ஒரே போர்வையில் படுப்பதில் தவறில்லை என்று தெரிகிறது.

மாதவிலக்கு மங்கையரின் மடிமீது தலைவைத்துப் படுப்பதிலும் தவறில்லை. ஏனெனில் நபிகளார் (ஸல்) அவர்கள் தன் துணைவியாராகிய ஆயிஷா நாயகி (ரலி) அவர்கள் மாதவிலக்காக இருந்த போது அம்மையாரின் மடிமீது சாய்ந்து படுத்து திருமறை குர்ஆன் ஓதிவந்திருக்கிறார்கள்.

*(தகவல் - ஸஹீஹுல் முஸ்லிம்)*

மாதவிலக்காக ஆயிஷா அம்மையார் (ரலி) இருந்த போது அவர்கள் பருகிய பானத்தின் மீதிப் பானத்தை நபியவர்கள் அம்மையார் வாய்வைத்த இடத்திலேயே வாய்வைத்து பருகினார்கள். இவ்வாறே மாதவிலக்கான ஆயிஷா நாயகி (ரலி) கடித்த எலும்புள்ள

மாமிசத்துண்டை அவர்கள் நபிகளாரிடம் கொடுக்க நபியவர்கள், அதை அம்மையார் வாய் வைத்த இடத்திலேயே வாய்வைத்துப் புசித்தார்கள்.

*(தகவல்-ஸஹீஹுல் முஸ்லிம்)*

## உதிரப் போக்கு (இஸ்த்திஹாழா)
## (DYS FUNCTION UTERINE BLEEDING)

மாதவிலக்கு மங்கையர்க்கு ஹராமான தொழுகை, நோன்பு, தவாஃப் குர்ஆன் ஓதுதல் போன்ற நற்செயல்கள், உதிரப்போக்குடைய பெண்களுக்கு ஹராமாகாது. உதிரப்போக்கு என்றால் மாதத்தில் ஓரிரு நாட்களைத்தவிர ஏனைய நாட்களெல்லாம், அல்லது 15 நாட்களுக்கு மேல் தொடர்ச்சியாக ஒரு பெண் சுத்தமாக இல்லாமல் இரத்தம் ஒழுகும் நிலையினை அடைவதாகும்.

நாயகத் தோழியருள் ஒருவராகிய பாத்திமா பிந்த் அபூ ஹுபைஷ் (ரலி) அவர்களும் நபி (ஸல்) அவர்களின் துணைவியருள் ஒருவராகிய ஜைனப் பிந்த் ஜஹ்ஷ் (ரலி) அவர்களின் சகோதரி உம்மு ஹபீபா என்றழைக்கப்பட்ட ஹம்னா பிந்த் ஜஹ்ஷ் (ரலி) அவர்களும் இத்தகைய உதிரப்போக்கு நிலைக்கு ஆளாயினர்.

ஒரு முறை பாத்திமா பிந்த் ஜஹ்ஷ் (ரலி) அவர்கள் அண்ணலாரிடம் வந்து "யா றஸூலுல்லாஹ்! நான் உதிரப் போக்கு உடையவள் என்பதால் நான் சுத்தமான நிலை அடைவதேயில்லை. எனவே நான் தொழுகையை விட்டு விடலாமா?" எனக் கேட்டார்; அதற்கு நபியவர்கள் பதிலளிக்கையில், "கூடாது! அது ஒரு வித **நரம்புத் தளர்ச்சி** நோயன்றி. மாதவிலக்கல்ல! எனவே மாதவிலக்கு

ஏற்படும் நாட்களின் அளவுக்கு தொழுகையை விட்டு விடு! பிறகு உன் மீது படிந்த இரத்தத்தைக் கழுவிய பின் தொழுது கொள்!'' என்றார்கள்.

*(அறிவிப்பாளர்: அன்னை ஆயிஷா (ரலி) தகவல்: புகாரி - முஸ்லிம்)*

நபி மணி (ஸல்) அவர்கள் தன் துணைவியருள் ஒருவராகிய ஜைனப் பிந்த் ஜஹ்ஷ் (ரலி) என்ற அம்மையாரின் வீட்டில் தங்கியிருந்த போது அம்மையாரின் சகோதரியாகிய ஹம்னா பிந்த் ஜஹ்ஷ் (ரலி) அவர்கள் அண்ணல் நபிகளாரை நோக்கித் தன்னுடைய உதிரப்போக்கு நிலை குறித்து முறையிட்டு மார்க்கச் சட்ட விளக்கம் கேட்ட தகவலை திர்மதீ – அபூதாவூத் ஆகிய இரு ஹதீஸ் பெருநூல்கள் பதிவு செய்துள்ளன. ஹம்னாவின் கேள்வியும் அண்ணலாரின் பதில் மொழியும் பின் வருமாறு அமைந்துள்ளன,

ஹம்னா: அல்லாஹ்வின் தூதரே! நான் மிக அதிகமாகவும் கடுமையாகவும் உதிரப் போக்குடையவளாக இருக்கிறேன். இதனால் தொழுகையையும் நோன்பையும் நிறைவேற்ற வியலாமல் இந்தச் சூழல் என்னைத் தடுக்கிறதே! எனவே எனக்குத் தாங்கள் பிறப்பிக்கும் உத்தரவு என்ன?

நபி (ஸல்):– உன்னுடைய இந்த இரத்தப்போக்கைத் தடுக்கும் விதமாக உன் இனவுறுப்பின் மீது வைத்திட பஞ்சைப் பயன் படுத்திக் கொள்!

ஹம்னா:– பஞ்சு வைப்பதனால் தடுக்கவியலாத அளவுக்கு என் இரத்தப்போக்கு மிக அதிகமானது.

நபி (ஸல்):– அவ்வாறாயின் கடிவாளமிடுவது போன்று நாடாவினால் இறுக்கிக் கட்டிக் கொள்!

ஹம்னா:- இவ்வாறு செய்தாலும் தடுக்கவியலாத அளவுக்கு என் இரத்தப் போக்கு அதிகமானது.

நபி (ஸல்):- இரத்தத்திற்கும் பொதுவாக ஒரு துணியை வைத்து அடைத்துக் கொள்!

ஹம்னா:- இதனாலும் தடுக்கவியலாத அளவுக்கு என் இரத்தப்போக்கு அதிகமானது. என் இரத்தம் (கசியாமல்) மிகுதியாகக் கொட்டுகிறதே!

நபி (ஸல்):- இரு முறைகளை நான் உனக்குக் கூறுகிறேன். இவ்விருமுறைகளில் எதைச் செய்தாலும், ஒன்றுக்கு மற்றொன்று சரியாகிவிடும்! இவ்விரண்டையும் செய்ய உனக்கு சக்தியிருந்தாலும் இவற்றில் எதைச்செய்ய உன்னால் எளிதில் இயலும் என்று உன்னுடைய நிலை உனக்கே தெரியும். இத்தகைய இரத்தப் பொழிவு ஷைத்தானின் உதைகளில் ஒரு வித உதையாகும்.

ஆறு அல்லது ஏழு நாட்களை மாதவிலக்கு நாட்களென்று கணித்துக் கொள்! பிறகு சுத்தநிலையில் இருப்பதாகக் கருதிக்கொள். பின்னர் 23 அல்லது 24 இரவுகளிலும் பகல்களிலும் ஒவ்வொரு வக்திற்கும் ஒரு ஒழு செய்து தொழுது கொள்! நோன்பு வைத்துக் கொள்! ஏனெனில் இதுவே உனக்குப் போதுமாகும். ஆகவே, ஒவ்வொரு மாதமும் மற்ற பெண்களுக்கு மாதவிலக்கு ஏற்பட்டு அவர்கள் தமது மாதவிலக்கு முடிவில் சுத்தமாகும் கால அளவைக் கணித்து நீயும் ஒவ்வொரு மாதமும் இவ்வாறு செய்துகொள்.

அல்லது உன்னால் இயலுமாயின் லுஹரைப் பிற்படுத்தி அஸரைத் துரிதப்படுத்தி குளித்துவிட்டு – லுஹர் அஸர் ஆகிய இரு

தொழுகைகளுக்கு மத்தியில் ஜம்உ (இணைப்பு) செய்துகொள். மேலும் மக்ரிபைப் பிற்படுத்தி இஷாவைத் துரிதப்படுத்தி உன்னால் இயலுமாயின் குளித்து விட்டு மக்ரிபு இஷா ஆகிய இரு தொழுகைகளுக்கு மத்தியில் ஜம்உ செய்து கொள். குளித்துவிட்டு சுப்ஹு தொழுது கொள். நோன்பையும் வைத்துக்கொள். இவ்விரு முறைகளில் இந்த முறை என்னைப் பொறுத்த வரையிலும் மிகவும் ஆச்சரியமாகவுள்ளது.

இவ்வாறு எம்பெருமானார் (ஸல்) அவர்கள் தன் மைத்துனியிடம் விளக்கிக் கூறிய விதிமுறைகள், உதிரப்போக்குடைய பெண்களுக்கும் மாதவிலக்குடைய பெண்களுக்குமிடையேயுள்ள மார்க்கச்சட்டங்களின் வேறுபாட்டை உணர்த்துகின்றன.

ஆயிஷா நாயகி (ரலி) அறிவித்ததாக புகாரி முஸ்லிமில்இடம் பெற்ற முதல் ஹதீஸ், உர்வத் இபனு ஸுபைர் (ரலி) அறிவித்ததாக அபூதாவூது – நஸயீ ஆகிய ஹதீஸ் நூல்களிலும் இடம் பெற்றுள்ளது. ஆனால் உர்வத் இப்னு ஸுபைர் (ரலி) அவர்களின் அறிவிப்பின் படி நபி (ஸல்) அவர்கள், பாத்திமா பிந்த் அபூஹுபைஷ் (ரலி) என்ற பெண்மணியை நோக்கி, "(உனக்கு வெளியேறிக் கொண்டிருப்பதாக நீ குறிப்பிடும்) அந்த இரத்தம் மாதவிலக்காக இருந்தால் (பெரும் பாலும் பெண்களில்) அறியப்படும் கறுப்பு இரத்தமாகும். எனவே அவ்வாறு மாதவிலக்கானால் தொழுகையை விட்டுவிடு! மற்றவகை (உதிரப்போக்கு) இரத்தமானால் (ஒவ்வொரு வக்துக்கும் தனித்தனியாக) ஒலுச் செய்து தொழுதுகொள். ஏனெனில் இது ஒரு வித நரம்பு நோயாகும் என்று கூறியதாக இடம் பெற்றுள்ளது.

எனவே மேற்கண்ட ஹதீஸ்களின் மூலம் புலப்படும் மார்க்கச்

சட்டங்கள் எவையெனில், இஸ்த்திஹாழா எனப்படும் உதிரப் போக்குடைய பெண் மாதத்தில் ஆறு அல்லது ஏழு நாட்களைத் தவிர ஏனைய நாட்களில் சுத்தமான நிலையுடைய பெண்ணைப்போல் தொழ வேண்டும்! நோன்பு வைக்க வேண்டும்! குர்ஆனைத் தொடலாம்! கஃபாவை தவாஃப் செய்யலாம். ஆனால் இத்தகைய பெண் ஒவ்வொரு வக்து தொழுகைக்காகவும், அந்தந்த வக்து வந்த பின்னர்தான், ஒலு செய்ய வேண்டும். அவ்வாறு ஒலு செய்தவுடனேயே தொழ வேண்டும். தொழுகிற நேரத்தில் உதிரக்கசிவு உடலில் அல்லது உடையில் படாதவாறு பஞ்சு, துணி போன்றவற்றை இனவுறுப்புடன் இணைத்துக் கட்டியவண்ணம் தொழ வேண்டும்.

## பிள்ளைப்பேறு உதிரம் (நிஃபாஸ்)
## (POST PARTUM BLEEDING)

குளியலைக் கடமையாக்கும் **5–வது** காரணம் பிள்ளைப்பேறு உதிரம் வெளியேறுவதாகும். இந்த உதிரத்திற்கு **நிஃபாஸ்** என்று பெயர். இந்த வகை இரத்தம், கருவறையிலிருந்து குழந்தை முழுமையாக வெளிவந்த பின்னரோ, அல்லது குழந்தையின் உடலின் சிறுபகுதி மட்டும் வெளிவந்த பின்னரோ வெளியேறும் தன்மையுடையதாகும். குழந்தை வெளிவருவதற்கு முன்னரோ, அல்லது குழந்தையின் உடலின் சிறு பகுதி மட்டும் வெளிவந்த பின்னரோ வெளியேறும் இரத்தம் நிஃபாஸ் ஆகாது. எனவே, இவ்வாறு இரத்தம் வெளிவந்த பெண், நிஃபாஸ் உடையவளாகக் கணிக்கப்பட மாட்டாள்; ஆகவே அவள், சுத்தமான பெண்கள் நிறைவேற்றும் வழிபாடுகளையெல்லாம் நிறைவேற்றக் கடமைப் பட்டவள் ஆவாள்.

குழந்தை கருவறையிலிருந்து முழுமையாக வெளிவந்தபின் வெளியேறும் இரத்தம் மட்டுமே ஷாபி மத்ஹபின்படி நிஃபாஸ் ஆகும். குழந்தையின் உடலின் சிறுபகுதியோ, பெரும்பகுதியோ வெளிவந்தபின் வெளியேறிய இரத்தம் – ஷாபி மத்ஹபின் அடிப்படையில் நிஃபாஸ் ஆகாது.

குழந்தை, உரிய வடிவம் பெறாமல் இரத்தக் கட்டி நிலையிலோ தசைக்கட்டி நிலையிலோ – வெளிவந்தால் அதற்குப்பின் வெளியேறும் இரத்தம் நிஃபாஸ் ஆகாது; அது ஹைழு (மாதவிலக்கு) இரத்தமாகவோ அல்லது வேறு கெட்ட இரத்தமாகவோ இருக்கலாம் ஆனால், விரல், நகம், முடியைப் போன்று குழந்தையின் தோற்றத்தில் சிறிதளவாவது தென்படும் வண்ணம் விழுந்த கட்டிக்குப் பின் வெளியேறிய இரத்தம் நிஃபாஸ் ஆகும்.

இரட்டைக் குழந்தையைப் பெற்றெடுத்த பெண்ணின் நிஃபாஸ் காலத்தை, அவள் முதல் குழந்தையைப் பெற்றெடுத்த நேரத்திலிருந்து கணிக்கத் தொடங்க வேண்டும். ஆனால் ஷாபி மத்ஹபின்படி அவளின் நிஃபாஸ் காலம், இரண்டாவது குழந்தையைப் பெற்றதிலிருந்து தான் கணிக்கப்பட வேண்டும்.

நிபாஸின் காலகட்டத்திற்குக் குறைந்த பட்ச அளவு என்று எதுவுமில்லை. அது ஒரு வினாடியாகக் கூட இருக்கலாம். எனவே ஒரு பெண் குழந்தையைப் பெற்றெடுத்தவுடனேயே அவளுடைய நிபாஸ் இரத்தம் ஒரு வினாடியில் வெளியேறி நின்றுவிடலாம். அல்லது இரத்தம் வெளிவராமலேயே பிள்ளையைப் பெற்றெடுக்கலாம். இத்தகைய சூழலில் அவளின் நிபாஸ் முடிந்துவிட்டது. எனவே, சுத்தமான பெண்களின் மீது அவசியமான வழிபாடுகளெல்லாம் அவள் மீது அவசியமாகிவிட்டது.

நிபாஸின் அதிகபட்சக் கால அளவு ஹனபி மத்ஹபின்படி 40–

நாட்களாகும். ஷாபி மத்ஹபின்படி அதிகபட்சகால அளவு 60 நாட்கள் என்றும் பெரும்பாலும் பெண்களுக்கு நடைமுறையிலுள்ள கால அளவு 40 நாட்கள் என்றும் கணிக்கப்பட்டுள்ளது.

நிபாஸின் அதிகபட்ச காலகட்டத்தின் இடையில் ஏற்படும் சுத்தநிலை, 15 நாட்களாகவோ அல்லது அதற்கு மேற்பட்டதாகவோ இருந்தாலும் கூட அந்தக் கால கட்டம் முழுவதையும் நிபாஸின் காலமாகவே கணிக்கப்படும். ஆனால் ஷாபி மத்ஹபின்படி இடைக்கால சுத்த நாட்கள் 15 நாட்களாகவோ அல்லது அதற்கு மேற்பட்ட நாட்களாகவோ இருந்தால் அந்தக் கால கட்டத்தை சுத்த நாட்களாகவே கருதப்படும். இந்த சுத்த நாட்களுக்குப் பிறகு வெளியேறும் இரத்தத்தை மாதவிலக்கு இரத்தமாகக் கணிக்கப்படும். இதற்கு முன்னர் வெளியேறிய இரத்தத்லதை நிபாஸ் ஆகக் கருதப்படும். இந்த சுத்த நாட்களுக்குப் பிறகு வெளியேறும் இரத்தத்தை மாதவிலக்கு இரத்தமாகக் கணிக்கப்படும். இதற்கு முன்னர் வெளியேறிய இரத்தத்தை நிபாஸ் ஆகக் கருதப்படும். அதே நேரத்தில் இடைக்கால சுத்த நாட்கள், 15 நாட்களை விடக் குறைவாக இருந்தால் ஒட்டுமொத்தக்கால அளவையும் நிபாஸின் காலமாகவே கணிக்கப்படும்,

மாதவிலக்கு வந்த பெண்கள், செய்யக்கூடாத அனைத்து செயல்களையும் நிபாஸ் எனும் பிள்ளைப்பேறு இரத்தம் கசியும் பெண்களும் செய்யக் கூடாது.

பிள்ளைப் பேற்றின் போது நிபாஸ் இரத்தம் சிறிதும் கசியாமல் வெறுமனே ஈரப்பசையற்ற நிலையில் குழந்தையைப் பெற்றெடுத்தாலும் ஒரு பெண் குளிப்பது கடமையாகும்.

ஷஹீதுகள் (மார்க்கப் போரில் உயிர் துறந்தோர்) நீங்கலாக மரணமடைந்த அனைவரையும் குளிப்பாட்டுவது மற்றவர்கள் மீது கடமையாகும்.

# தமிழக முஸ்லிம் கல்லூரிகளுக்கு ஒரே மாதிரியான தீனியாத் பாடத்திட்டம்

## முதலாமாண்டு

**பாடம் - 1 இஸ்லாம்**

பொருள் – முக்கியத்துவம் – நிறைவுடைய மார்க்கம் – இறைவனால் ஒப்புக் கொள்ளப்பட்ட மார்க்கம் – அதன் ஐந்து கடமைகள்.

**பாடம் - 2 ஈமான்**

திருக்கலிமா – பொருள் – விளக்கம் – ஈமானின் அம்சங்கள் (சுருக்கமாக) – அல்லாஹ் மலக்குள் – வேதங்கள் – நபிமார்கள் – உலக அழிவு நாள் – விதி, நன்மை, தீமை, இறைவனிடம் இருந்து வருதல் – மரணத்திற்குப் பின் எழுப்பப்படல்.

**பாடம் - 3 குர்ஆன்**

வஹி என்னும் வேத வெளிப்பாடு – இறங்கிய முறை – பாதுகாத்தல் – தொகுத்தல் – சிறப்புகள்

**பாடம் - 4 குர்ஆன் சூராக்கள்**

பொருள் – விளக்கம் (1) சூரத்துல் பாத்திஹா, (2) சூரத்துல் இக்லாஸ், (3) சூரத்துல் ஃபீல் (4) சூரத்துல் குறைஷ்.

**பாடம் - 5 சுத்தம்**

உடல் – உடை – இருப்பிடம் – முழுக்கு – ஒழு – தயம்மும் – சட்ட திட்டங்கள்.

**பாடம் - 6 தொழுகை**

பாங்கு – இகாமத் – தொழுகையின் நேரங்கள் – தொழக்கூடாத நேரங்கள் – தொழும் முறை – சட்டதிட்டங்கள் – முக்கியத்துவம்.

**பாடம் - 7 நோன்பு**

குர்ஆனில் நோன்பு – ஹதீஸில் நோன்பு – நோற்கக் கூடாத நாட்கள் – இம்மை மறுமையின் பிரதிபலன்கள் – நோன்பின் மாண்பு.

**பாடம் - 8 அக்லாக் - நற்குணங்கள்**

மனித உடலுறுப்புக்களைப் பயன்படுத்தும் முறை – ஹலால் – ஹராம் – அடியார்களுக்குச் செய்யும் கடமைகள்.

**பாடம் - 9 குர்ஆன் கூறும் நபிமார்களின் வரலாறு**

(அ) ஹல்ரத் ஆதம் (ஆ) ஹல்ரத் நூஹ்

**பாடம் - 10 நபி (ஸல்) அவர்களின் வாழ்க்கை வரலாறு (மக்கா வாழ்க்கை)**

அரேபியா நிலைமை – பெருமானாரின் குடும்பச் சிறப்பு – யானை ஆண்டு – பிறப்பு – இளமை – நபிப்பட்டம் – மக்கா வாழ்க்கை – அதன் பிரதிபலிப்பு – பிரச்சாரம் – தாயிப் செல்லல் – ஹிஜ்ரத்.

**பாடம் - 11 கலீபாக்களின் வாழ்க்கை வரலாறு**

குணநலன்கள் – ஆட்சி முறை (அ) ஹல்ரத் அபூபக்கர் (ஆ) ஹல்ரத் உமர்

**பாடம் - 12 இஸ்லாமியப் பண்பாடு**

இஸ்லாத்தில் (அ) உண்ணும் முறை (ஆ) பருகும் முறை (இ) உறங்கும் முறை (ஈ) உடற் சுத்தம் பேணும் முறை (மலஜலம் கழித்தல், நகம், முடி எடுத்தலின் ஒழுக்கங்கள்).

## இரண்டாமாண்டு

**பாடம் - 1 தௌஹீது**

ஏகத்துவம் – விளக்கம் – முக்கியத்துவம் – இஸ்லாத்தின் ஆணிவேர் – ஷிர்க் என்னும் இணை வைத்தல் மன்னிக்க முடியாத குற்றம்.

**பாடம் - 2 ஈமான்**

அம்சங்கள் விரிவாக – அல்லாஹ், வானவர்கள், தூதர்கள், உலக அழிவு நாள், விதி, நன்மை தீமை இறைவனிடமிருந்து வருதல், மரணத்திற்குப் பின் திரும்ப எழுப்பப்படுதல்.

**பாடம் - 3 ஆகிரத்**

மரணம் – மண்ணறை – திரும்ப எழுப்பப்படுதல் – கியாமத் – கேள்விக் கணக்கு – அஃமால் நாமா – மீஸான் – சிராத் பாலம் – ஹவ்லுல் கவ்தர் – ஷபாஅத் – சுவர்க்கம் – நரகம்.

**பாடம் - 4 தொழுகை**

குர்ஆனில் தொழுகை – ஹதீஸில் தொழுகையின் சிறப்பு – ஜமாஅத் தொழுகை – ஜும்ஆ தொழுகை – பெருநாள் தொழுகை – கஸர் தொழுகை – ஜனாஸா தொழுகை – முறை – சட்டதிட்டங்கள்.

**பாடம் - 5 ஹதீஸ்**

விளக்கம் – பாதுகாத்தல் – தொகுத்தல் – ஸிஹாஹ் ஸித்தா – ஆறு நூல்திரட்டுகள் – நூலாசிரியர்களின் வாழ்க்கைச் சுருக்கம்.

**பாடம் - 6 ஜகாத்**

விளக்கம் – நோக்கம் – குர்ஆனில் ஜகாத் – ஹதீஸில் ஜகாத் – ஜகாத் யார் மீது கடமை – ஜகாத் பெறத் தகுதியான எட்டு வகையினர் – ஜகாத் கொடுக்க விலக்கப்பட்டவர்கள் – அளவு – பைத்துல் மால் – பொருளாதார சமத்துவ சமுதாயம்.

**பாடம் - 7 குர்ஆன் சூராக்கள்**

பொருள் – விளக்கம் (அ) சூரத்துல் கத்ர், (ஆ) சூரத்துல் அஸ்ர், (இ) சூரத்துல் மாஊன், (ஈ) சூரத்துல் கௌதர்.

**பாடம் - 8 பெரும் குற்றங்களின் விளைவும், தண்டனையும்**

கொலை – தற்கொலை – திருட்டு – விபச்சாரம் – மதுக்குடி – வட்டி – பொய் சத்தியம் செய்தல் – கற்புள்ள பெண்ணின் மீது அவதூறு சொல்லுதல்.

**பாடம் - 9 குர்ஆன் கூறும் நபிமார்களின் வரலாறு**

ஹஸ்ரத் இபுறாஹீம் (அலை) – தீயிலிடுதல் – மகனைக் குர்பானி கொடுத்தல் – படிப்பினை.

**பாடம் - 10 நபிகளின் வரலாறு**

மக்காவை துறந்து மதீனா செல்லல் – ஹிஜ்ரத் – மதீனா வாழ்க்கை – பத்ர் – உஹது – அகழ்ப்போர்கள் – ஹுதைபியா உடன்படிக்கை – மக்கா வெற்றி – இறுதி ஹஜ் – முடிவு.

**பாடம் - 11 கலீபாக்களின் வரலாறு**

வாழ்க்கை – ஆட்சி முறை – குணநலன்கள் (அ) ஹஸ்ரத் உத்மான், (ஆ) ஹஸ்ரத் அலி.

**பாடம் - 12 இஸ்லாமியப் பண்பாடு**

(அ) இஸ்லாத்தில் ஆடை அணியும் முறை, (ஆ) ஸலாம் சொல்லும் முறை, (இ) வீட்டில நுழையும் முறை, (ஈ) மஸ்ஜிதில் நுழையும் முறை.

**பாடம் - 13 பிக்ஹு என்னும் இஸ்லாமிய அறநெறி**

நான்கு மத்ஹபுகள் – உருவாகக் காரணம் – மத்ஹபுகளைப் பின்பற்றும் நாடுகளும் மக்களின் எண்ணிக்கையும் – நான்கு இமாம்களின் காலம் – மத்ஹபு பிரச்சனைக்குத் தீர்வு.

# குர்ஆன் - ஹதீஸில் குடும்பத் தலைவி!

“(மனைவியரால்) நீங்கள் மனநிம்மதி அடைவதற்காக – உங்களிலிருந்தே உங்களுக்காக மனைவியரைப் படைத்து, அன்பையும் அருளையும் உங்களுக்கு மத்தியில் ஏற்படுத்தியிருப்பது, (அல்லாஹ்வாகிய) அவனுடைய (ஏகத்துவ) அத்தாட்சிகளில் ஒன்றாகும்.” *(அல்குர்ஆன் 30:21)*

“(மனைவியராகிய) அவர்கள், உங்களின் ஆடை ஆவர். நீங்கள் அவர்களின் ஆடையாவீர்கள்.” *(அல்குர்ஆன் 2:187)*

“உங்கள் மனைவியர், உங்களுக்குரிய வயல்கள் ஆவர். எனவே, (பயிர் செய்வதற்காக) உங்கள் வயல்களை நோக்கி நீங்கள் விரும்பிய விதத்தில் வாருங்கள்.” *(அல்குர்ஆன் 2:223)*

“உங்களில் சிறந்தவர், உங்கள் மனைவிக்கு உகந்தவர் ஆவார்.” *-நபிமணி (ஸல்)*

*அறிவிப்பவர்: அன்னை ஆயிஷா (ரலி) (தகவல்: திர்மிதீ)*

“உங்களிடம் அமானிதமாக அல்லாஹ்வால் ஒப்படைக்கப்பட்ட மங்கையரை (மணம் புரிந்து) கை பிடித்தீர்கள். (மணம் புரியுங்கள் என்ற) அல்லாஹ்வின் திருவசனத்தினால் இந்த மங்கையரின் இனவுறுப்புகளை அனுபவிக்க அனுமதி பெற்றீர்கள். எனவே, பெண்களின் (மீது அநீதியிழைக்கும்) விஷயத்தில் அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள்.”

*-நபிமணி (ஸல்)*

*அறிவிப்பவர்: ஜாபிர் (ரலி) தகவல்: ஸஹீஹ் முஸ்லிம்*

## "ஜனாபத்" (உடலுறவு & விந்து வெளியேற்றம்) குளியலின் நிய்யத்து

نَوَيْتُ غُسْلًا مِنَ الْجَنَابَةِ وَطَهَارَةً لِلْبَدَنِ
وَاِسْتِبَاحَةً لِلصَّلٰوةِ اِمْتِثَالًا لِاَمْرِاللّٰهِ تَعَالٰى

**நவைத்து குஸ்லன் மினல் ஜனாபத்தி வதஹாறத்தன் லில் பதனி வஇஸ்த்திபாஹத்தன் லிஸ்ஸலாத்தி இம்திஸாலன் லிஅம்ரில்லாஹி தஆலா.**

பொருள்:- தொழுகையை ஆகுமாக்கிடவும், உடலுக்குத் தூய்மை ஏற்படவும் - அல்லாஹ்வின் ஆணைக்கிணங்கிய நிலையில் - ஜனாபத்தின் குளியலை நிய்யத் செய்கிறேன்.

## மாதவிலக்குக் குளியலின் நிய்யத்

نَوَيْتُ غُسْلًا مِنَ الْحَيْضِ وَطَهَارَةً لِلْبَدَنِ
وَاِسْتِبَاحَةً لِلصَّلٰوةِ اِمْتِثَالًا لِاَمْرِاللّٰهِ تَعَالٰى

**"நவைத்து குஸ்லன் மினல் ஹைழி வதஹாறத்தன் லில் பதனி வஇஸ்த்திபாஹத்தன் லிஸ்ஸலாத்தி இம்திஸாலன் லிஅம்ரில்லாஹி தஆலா."**

பொருள்:- தொழுகையை ஆகுமாக்கிடவும், உடலுக்குத் தூய்மை ஏற்படவும், அல்லாஹ்வின் ஆணைக்கிணங்கிய நிலையில் - மாதவிலக்கின் குளியலை நிய்யத் செய்கிறேன்.

## பிள்ளைப் பேறு குளியலின் நிய்யத்

نَوَيْتُ غُسْلًا مِنَ النِّفَاسِ وَطَهَارَةً لِلْبَدَنِ
وَاِسْتِبَاحَةً لِلصَّلٰوةِ اِمْتِثَالًا لِاَمْرِاللّٰهِ تَعَالٰى

"நவைத்து குஸ்லன் மினன்னிஃபாஸி வதஹாறத்தன் லில்பதனி வஇஸ்த்திபாஹத்தன் லிஸ்ஸலாத்தி இம்திஸாலன் லிஅம்ரில்லாஹி தஆலா."

பொருள்: தொழுகையை ஆகுமாக்கிடவும், உடலுக்குத் தூய்மை ஏற்படவும் - அல்லாஹ்வின் ஆணைக்கிணங்கிய நிலையில் - பிள்ளைப் பேறு குளியலை நிய்யத் செய்கிறேன்.

## மூன்று வகைக் குளியலின் பிறகும் ஓதவேண்டிய துஆ

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ جَعَلَ الْمَاءَ طَهُوْرًا وَّالْاِسْلَامَ
نُوْرًا اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا وَمَوْلَانَا مُحَمَّدٍ وَّعَلٰى

اٰلِهٖ وَصَحْبِهٖ وَسَلِّمْ اَللّٰهُمَّ اجْعَلْنِىْ مِنَ التَّوَّابِيْنَ
وَاجْعَلْنِىْ مِنَ الْمُتَطَهِّرِيْنَ وَاجْعَلْنِىْ مِنْ عِبَادِكَ
الصَّالِحِيْنَ اَشْهَدُ اَنْ لَّآ اِلٰهَ اِلَّا اللّٰهُ وَحْدَهٗ لَا
شَرِيْكَ لَهٗ وَاَشْهَدُ اَنَّ مُحَمَّدًا عَبْدُهٗ وَرَسُوْلُهٗ

**"அல்ஹம்து லில்லாஹில்லதீ ஜஅலல் மாஅ தஹூறா வல் இஸ்லாம நூறா – அல்லாஹும்ம ஸல்லி அலா ஸைய்யிதினா வமவ்லானா முஹம்மதின் வஅலா ஆலிஹீ வஸஹ்பிஹீ வஸல்லிம். அல்லாஹும்மஜ்அல்னீ மினத்தவ்வாபீன வஜ்அல்னீ மினல் முத்ததஹ்ஹிரீன வஜ்அல்னீ மின் இபாதிக்கஸ் ஸாலிஹீன். அஷ்ஹது அன்லா இலாஹ இல்லல்லாஹு வஹ்தஹூ லா ஷரீக்க லஹூ வஅஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹூ வறஸூலுஹு."**

பொருள்:- தண்ணீரைத் தூய்மையாகவும் இஸ்லாமை ஒளியாகவும் அமைத்த அல்லாஹ்வுக்கே அனைத்துப் புகழும் உரியன. யாஅல்லஹ்! எங்கள் நாயகம் முஹம்மது (ஸல்) மீதும் அவர்களின் கிளையார் தோழர்கள் மீதும் அருளும் அமைதியும் பொழிவாயாக!

யாஅல்லாஹ்! என்னைப் பாவமன்னிப்புக் கோரியவர்களிலும், தூய்மையானவர்களிலும், உன் நல்லடியார்களிலும் சேர்த்தருள்வாயாக. அல்லாஹ்வன்றி வணக்கத்திற்குரிய எவருமில்லை. அவன் ஏகன். அவனுக்கு இணையில்லை என்றும் முஹம்மது (ஸல்) அவர்கள் அவனுடைய அடியாரும் திருத்தூதரும் ஆவார்கள் என்றும் சாட்சியம் கூறுகிறேன்.

## சுன்னத் குளியல்கள்!

1. ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும், 'ஜும்ஆ' தொழுகையை நிறைவேற்றக் குளித்தல்.
2. நோன்புப் பெருநாள் (ஈதுல் ஃபித்ர்), ஹஜ்ஜுப் பெருநாள் (ஈதுல் அழ்ஹா) தொழுகைகளை நிறைவேற்றிடக் குளித்தல்.
3. ஹஜ்ஜு - உம்ராவின் 'இஹ்ராம்' உடையினை அணிவதற்காகக் குளித்தல்.
4. அரஃபா மைதானத்தில் ஹஜ்ஜின்போது தங்குவதற்காகக் குளித்தல்.

## 'முஸ்தஹப்' குளியல்கள்!

1. சுத்தமான நிலையில் இஸ்லாத்தை ஏற்றாலும் 'கலிமா' சொல்வதற்காகக் குளித்தல்.
2. புனித மக்கா, புனித மதீனா நகர்களில் நுழைவதற்காகக் குளித்தல்.
3. 15 வயது முழுமை பெற்று 16 வயது தொடங்கியதற்காகக் குளித்தல்.
4. மயக்கம், போதை, பைத்தியம் போன்றவற்றிலிருந்து தெளிவு பெற்றதற்காகக் குளித்தல்.

**குறிப்பு: 'சுன்னத்'** என்றால், நபி (ஸல்) அவர்கள் தவறாமல் செய்து வந்த நடைமுறையாகும். இந்த நடைமுறையைப் பின்பற்றினால் மறுமைப் பயன் கிடைக்கும். விட்டுவிட்டால் தண்டனையில்லை. ஆனால் கண்டனத்திற்குரியது.

**'முஸ்த்தஹப்'** என்றால், நபி (ஸல்) அவர்கள் வழக்கமாகச் செய்யாமல் அவ்வப்போது செய்து வந்த நடைமுறையாகும். இந்த நடைமுறையைப் பின்பற்றினால் மறுமைப் பயன் கிடைக்கும். விட்டுவிட்டால் தண்டனையுமில்லை. கண்டனமுமில்லை.